# செந்தமிழ்ச் செல்வி

## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

மூன்ருவது பரல்

சிலம்பு-௫௦] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௬, ஐப்பசி (Nov'75) [பரல்-௩

## 'செந்தமிழ்ச் செல்வி'

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

## உள்ளுறை


| | பக்கம் |
|---|---|
| மறைத்திரு மறைமலையடிகளார் கற்றலிற் காட்டிய பெருவேட்கை | கஉக |
| மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி | கஉரு |
| சங்க நூல்களில் மீன்கள் | கசஎ |
| ஆட்சி மொழித் துணுக்குகள் | கருங |
| திருக்குறளில் கணிதநுட்பம் | கருசு |
| தமிழ் கண்ட தண்பொருநை | கசு0 |
| செய்திகளும் குறிப்புக்களும் | கஎக |
| மதிப்புரை | கஎச |

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫0 | திருவள்ளுவர் ஆண்டு உ00௬, ஐப்பசி நவம்பர் 1975 | பரல் ௬ |
|---|---|---|

## மறைத்திரு மறைமலையடிகளார் கற்றலிற் காட்டிய பெருவேட்கை

அடிகளார் இளமைக் காலமுதல் நூல்கள் வாங்குவதிலும் அவற்றைக் கற்பதிலும் பெரு விருப்பங் கொண்டிருந்தார் என்பது அவர் எழுதிய நாட்குறிப்புக்களின் வாயிலாகவும் இயற்றிய பலதுறை நூல்கள் வாயிலாகவும் நன்கு புலப்படு கின்றது. 'கற்றனைத் தூறும் அறிவு', 'கேடில் விழுச் செல்வம் கல்வி', 'என் ஒருவன் சாந் துணையுங் கல்லாதவாறு' என்னும் வள்ளுவர் வாய்மொழிகள் அடிகளார் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்துள்ளன என்றால் அது மிகையாகாது.

22-6-1899 முதல் 15-8-1950 வரை அடிகளார் எழுதிய நாட்குறிப்புக்கள் கிடைக்கப் பெறுகின்றன. அவர்கள் தம் நாட் குறிப்புக்களில் செய்திகளை ஆங்கிலத்திலே எழுதியதற்கு ஏதோ அவர்கட்கு ஒரு நோக்கம் இருந்தல் வேண்டும் என்று கருத வேண்டியதாகிறது. அவர்கள் இறையடி சேர்வதற்குமுன் ஒரு திங்கள் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் இருந்தமையால் அக் காலத்திலே மட்டும் நாட்குறிப்பு எழுதவில்லை. இறுதிக் காலமாகிய 1949, 1950 ஆம் ஆண்டு நாட்குறிப்புக்களில் அவர்கள் எழுதியவற்றைக் கொண்டு பலதுறை நூல்களைப் படிப்பதிலும், மக்கட்குத் தொண்டு செய்வதிலும் எத்துணை ஆர்வமும் இன்பமும் கொண்டிருந்தனர் என்பது விளங்கும்.

1949 நவம்பருக்குப் பின்னுள்ள நாட்குறிப்புக்களில் ஒரு நாள் 'ஏலாதி' படித்து முடிக்கப்பெற்றது 'ஆசாரக் கோவை' படிக்க எடுக்கப்பெற்றது என்றும், மற்றொரு நாள் 'இந்துமத

பால பாடம் படித்து முடிக்கப் பெற்றதென்றும், பின்பொரு நாள் 'பொன்வண்ணத் தந்தாதி' படித்து முடிக்கப் பெற்ற தென்றும், மற்றுமொருநாள் 'ஐந்திணையைம்பது' படிக்க எடுக்கப் பெற்றதென்றும எழுதியுள்ளனர். அவ்வாண்டுகளில் 'இளைஞர்க்கான இன்றமிழ்' என்ற கட்டுரை நூலை எழுதி அச்சிட்டு வந்தாரகளாதலால் மேலே குறிப்பிட்டுள்ள நூல் களைப் படித்து வந்தார்களெனத் தெரிகின்றது.

1950 சனவரி 20 முதல் மார்ச்சுத் திங்கள் 14ஆம் நாள் வரை இடையிடையே திருக்குறளுக்கு உரை எழுதி வருவதாகக் குறிக்கப்பெற்றுள்ளது. அங்ஙனம் உரை எழுதி வருகையில் 'வாழ்க்கைக் குறள்' என்ற தலைப்பில் குறளடியில் தம் கருத் துக்களை அமைத்துச் சில குறட்பாக்களை இயற்றியுள்ளதாகவும் குறிக்கப்பெற்றுள்ளது. ஆனல் அடிகளார் பிரிவுக்குப் பின் அவற்றிற்கான கையெழுத்துப்படி கிடைக்கப்பெறவில்லை.

1919 சனவரி 20ஆம் நாள் குறிப்பில்,

"மன அமைதியின்மையைப் புத்தகங்களைப் படிப்பதால் போக்கிக்கொள்வேன்' (I overcame uneasiness of mind by reading books) என்று எழுதியுள்ளனர்.

1919 நவம்பர் 8ஆம் நாள் குறிப்பில்,

'பெரும் பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று அப்பரடிகள் அருளியது போல் அடிகளார் அறிவு நூல்களைப் படிக்காத நாள் பிறவாத நாளெனக் கொண்டு 'படிக்காமல் ஒருநாளைக் கழிப்பது பேரிழப்பாகும்' (To spend a day without reading is a great loss) என்று எழுதியுள்ளனர்.

1950 ஏப்ரல் 15ஆம் நாள் குறிப்பில்,

"இன்று பகல் முழுதும் ஓய்வாக இருந்தேன். ஆனல் எப்போதும் சுறுசுறுப்பாகவும் படித்துக்கொண்டும் எழுதிக் கொண்டும் இருக்கவுமே விரும்புகிறேன. தாம் இன்புறுதற்கும் மெய்யறிவு பெறுதற்கு மல்லாமல் தம்மைச் சார்ந்த மக்கள் அறிவு பெறச் செய்வதற்கும், அவர்கள் சிறப்புற வாழ்வதற்கும் படிக்காமல் எதற்காகச் சும்மா ஓய்வாக இருப்பது? இறைவனே! நீ காட்டிய அருள்வழிகளை ஆடவர் மகளிர் குழந்தைகள் ஆகியோர்க்கு எடுத்து விளக்கும்பொருட்டு நீடுவாழ எனக்கு அருள்புரிவாயாக" (Rest almost the whole day. But I ever wish to be active, read and write What is the use of mere resting quiet, without reading for pleasure and enlightenment and imparting knowledge to our fellow-beings and uplifting them. May my Lord grant me long life to vindicate his ways to men, women and children.) என்று எழுதியுள்ளனர்.

அடிகளார் தாம் படிப்பதற்கெனத் தொகுத்த நூல்கள் நாலாயிரம் வரையாகும். அவற்றில் ஏறக்குறைய மூவாயிரம் பல துறைகளிலுள்ள ஆங்கில நூல்களாகும். எஞ்சியவற்றில் பெரும்பான்மை தமிழ் நூல்களும் ஒரு சில வடமொழி நூல்களு மாகும். அவற்றைப் பொன்னேபோற் போற்றி மரப் பேழைகளில் அழகுற அடுக்கி வைத்துப் பாதுகாத்து வந்தனர். அவர்கள் நூல்களையெல்லாம் படித்துள்ளனர் என்பதற்கு, அவை ஒவ்வொன்றிலும் அடிக்கோடிட்டிருப்பதும் ஓரங்களில் குறிப் புக்கள் எழுதியிருப்பதுமே சான்றாகும்.

இந்த முறையில் தொட்டுத் தொட்டு, எடுத்து எடுத்துப், புரட்டிப் புரட்டிச் சுவைத்துப் படித்த ஏடுகளைக் கொண்ட நூலகத்தை அடிகளார் தமது இறுதிக் காலத்தில் பொருள் முட்டுப்பாட்டின் காரணமாக விற்றுவிட முயன்றனர்.

23-9-1949இல் மதுரை தியாகராசர் கல்லூரியினர் அடிகளார் நூல்நிலையத்தைப்பார்வையிட வந்ததுபற்றி அவர்தம் நாட்குறிப்பில் குறிப்பிடுகையில், "இன்று பண்டிட் துரையரங்க னும் மதுரை தியாகராசர் கல்லூரி முதல்வர் திரு. சி. டி. சுப்பிரமணியன் செட்டியார், எம். ஏ. வும் வந்தனர். சிறந்த அறிஞரான கல்லூரி முதல்வர் எனது நூலகத்தைத் தமது கல்லூரிக்கு வாங்க விரும்புவதாகத் தெரிவித்தார்" என்று எழுதி யுள்ளார். முதல்வரிடம் தட்டச்சு செய்தற்காக நூலகப் பட்டியையும் கொடுத்துள்ளார். ஆனால் அம் முயற்சி பலனளிக்க வில்லையெனத் தெரிகிறது.

1950 ஏப்ரல் 28ஆம் நாள் குறிப்பில்,

"பேராசிரியர் அ. முத்தையா இன்று காலையில் வந்தார். என்னுடைய நூலகத்தை விற்கவேண்டும் என்று சொன்னேன்" (Prof Muthiah came in the morning and I told him to get my Library sold) என்று எழுதியுள்ளார்.

1950 ஏப்ரல் 30, சூலை 13 ஆகிய நாட்குறிப்புக்களில்,

"என் நூலகத்திலுள்ள புத்தகங்களை விற்க விரும்புகிறேன். இறைவனே! விரைவில் அவற்றிற்குத் தகுந்த ஊதியத்தோடு கூடிய விற்பனை கொடுத்தருள்க" (I wish to dispose of my Library books and may my Lord grant me soon a profitable sale of my books.) என்று எழுதியுள்ளார்.

1950 சூன் 14ஆம் நாள் குறிப்பில்,

"வீட்டுச் செலவுக்குப் பணம் இல்லாமல் மனவமைதி யில்லை. ஒரு சில வெள்ளித் தட்டுக்களையும், ஒரு வெள்ளிக்

குவளையையும் விற்க வேண்டியதாயிற்று. எம்பெருமானே! செலவுக்கு வேண்டிய பணத்தைக் கொடுத்துக் கவலையில்லாமல் வாழ அருள்புரிவீராக! பேராற்றலுள்ள அறிஞர்கட்கு நம் நாட்டில் உதவி செய்யும் செல்வர்கள் இல்லை. எளிய தமிழ்ப் பாடகர்களுக்குப் பொருளுதவி செய்வோரிடமிருந்து கிடைக்கும் பண உதவி குறைவாகவே உள்ளது. அறிஞர்கட்குக் கடவுள் தான் உதவி'' என்று எழுதியிருப்பது மிக்க மனவருத்தந் தருவதாயிருக்கிறது. Uneasiness of mind for want of money to meet the necessary household expenses. We sold a few silver plates and a tumbler. Will my all bountiful Lord grant me always ample money to meet our expenses and keep me always free from care and anxiety of mind ! Profound scholars get little support from those who do financial help to ordinary Tamil singers. God is the only help to really great scholars!

அடிகளார் தமது ஆராய்ச்சிக்கென 60 ஆண்டுகளாகத் தாமே உழைத்துத் தொகுத்துப் படித்த நூல்களைத் தமது செலவுக்குப் பணம் போதாமை கருதி விற்பதற்கு முயன்றாரெனினும் அவர் தம் வாழ்நாள் காலத்திலே அவை விற்கப்பெற்றுத் தம் கண்ணெதிரே பிறரால் எடுத்துச் செல்லப்பெறுமானால் அப்போதே அவர்தம் ஆவி உடலைவிட்டுப் பிரிந்திருக்கும் என்பது சொல்லாமலே விளங்கும்.

'அறிஞர்கட்குக் கடவுள்தான் உதவி' என்று அடிகளார் உணர்ந்து எழுதியிருக்கும்போது அவர் தமது மாளிகையில் நாடோறும் வழிபட்டுவந்த அம்மை அம்பலவாணர் எங்ஙனம் அவர் புகழோங்க அருளாதிருப்பர். எனவே, அடிகளார் பிரிவுக்கு முன் தமியேன் விரும்பி வேண்டியதற்கிணங்கித் தமக்குப்பின் தாம் தொகுத்த நூல்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திலே ஒப்புவிக்கப் பெற்றுப் பொதுமக்கட்குப் பயன்படுதல் வேண்டுமென்று 9-9-1950 இல் தாம் எழுதிய விருப்ப ஆவண (will) த்தில் குறிப்பிட்டுள்ளனர்.

அதன்படி இராமலிங்க அடிகள் தமது ஒன்பதாவது அகவையில் முதன் முதல் பேசிய சென்னை இலிங்கிச் செட்டித் தெரு 105 சோமு செட்டியார் மாளிகையில் 24-8-1958 இல் 'மறைமலையடிகள் நூல்நிலையம்' நிறுவப்பெற்று இன்று பல துறைகளில் 30,000 நூல்களைக் கொண்டதாய் வளர்ச்சி பெற்று ஆராய்ச்சியாளர்கட்குப் பெரிதும் பயன்பட்டு வருவது அம்மை அம்பலவாணர் திருவருட் குறிப்பேயாகும்.

வ. சு.

———



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*
அழகரடிகள் (இளவழகனர்)

## 3. நாகரிகச் சான்ருேர்

'நாகரிகம்' என்பதற்கு 'விளக்கம்' என்பது சொற்பொருள்; 'தெளிவு' என்பது கருத்து.

'சான்ருேர்' என்பதற்கு 'நிறைந்தோர்' என்பது பொருள்.

சிலர் 'உடற் பயிற்சி' 'தொழில்' முதலியன நிறைந்தவராகவும், 'கல்வி' 'கலை' முதலியன நிறைந்தவராகவும், 'தீது' 'நன்று' என்னும் பாகுபாடுகள் தெரிந்து நீதிகள் நிறைந்தவராகவும், 'பொதுமை' 'உயிரிரக்கம்' முதலியன நிறைந்தவராகவும், 'தூய்மை' 'புதுமை' நிறைந்தவராகவும் இருக்கலாம்.

எல்லாம் நிறைந்தவரையே 'சான்ருேர்' என்பதும் 'நாகரிகச் சான்ருேர்' என்பதும் பெரும்பான்மை வழக்கம்.

மாந்தர் பொதுமக்களாக இருந்தால், உடலில் நிறைவு உடையவர்களாகவும்,

கொஞ்சம் மேற்பட்டால் மனத்தில் கல்வி கலை நிறைந்தவராகவும் இருப்பர்;

உடற்பயிற்சி என்பது தொழில்களால் நடந்தால் உடம்பும் தெளிவாயிருக்கும்; தொழில்கள் மூலம் ஆக்கமும் உண்டாகும்; சிறுவர் சிறுமியர்கூட, வெறும் உடற்பயிற்சியைத் தொழிற் பயிற்சியாகச் செய்து வருதலே தக்கது!

மனத்தை நிறைவு செய்ய வேண்டுமானுல் கல்வியோடு கலைகளும் நிறைந்தவராக இருக்க வேண்டும். கல்வியிற் கலைகளை அடக்கி,

> ''வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்''

என்ருர் ஔவையார். ஆயினும், கல்வியை மொழிக்கல்வி எனப் பிரித்தும் மொழிக் கல்வியின் மூலமாகக் கற்கும் பலதலையான கலைகளைக் கலைக்கல்வி எனவும் வகை பிரித்துச்

"............செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்"

என்று அவர் தெளிவிப்பார்.

ஐம்பொறிகளோடு கூடிய உடல் என்பது 'பரு உடல்'; அந்தப் பொறிகளை ஆட்சி செய்யும் தலைமை வாய்ந்தது மனம்; அஃது உடலின் நுட்பமாதலின் மனத்தை 'நுண்ணுடல்' என்றும் கூறுவதுண்டு; இங்ஙனம் இருவகை உடல்கள் மக்களுக்கு அமைந்துள்ளன. உடலில் தொழிற் பயிற்சி நிறைந்து செல்வப் பொருளும், மனத்தில் கலைப் பயிற்சி நிறைந்து கல்விச் செல்வமும் ஆக இருவகைச் செல்வங்களையும் மக்கள் பெறுகின்றனர்.

இனி 'அருட்செல்வம்' என்பதொன்றும் இவற்றின் வேறாகச் சொல்லப்படுகிறது. அது விளையும் இடனும் கருதிக் கொள்ள வேண்டும்.

அதனை நுகர்பவர் யார்? மக்களே. அவர்களைத்தாம் உயிர்கள் என்று சொல்லுவது வழக்கம்!

உயிரில் நிறைவது என்பது உயிர்த்திறம்! அது நிறையும் போது உயிர் பக்குவம் பெற்று அருட்செல்வம் மேன்மேலும் நிறைவதற்கு வாய்ப்பு ஏற்படும்.

'எனது உடல்' என்றலின், 'எனது மனம்' என்றலின், 'நான்' என்பது வேறு. இந்தப் 'பருஉடல்' 'நுண்உடல்' என்னும் இருவகை உடல்களும் வேறு என்பது தெளிவாகத் தெரியும். நான் என்னும் உயிரைத்தான் 'மக்கள்' என்றும் மற்றச் 'சிற்றுயிர்' என்றும் சொல்லிக்கொள்கிறோம்.

பழக்கத்தில் பார்க்கும்போது அத்தகைய உயிர் மிகவும் சிற்றறிவு உயிராகத் தெரிகிறது. ஏனென்றால், அதற்குத் தெரியாதவை மாட்டாதவை எத்தனையோ உள்ளன; மேலும் அது, தனக்கென்று ஒரு வலிவு உடையதாகவும் இல்லை; இப்படிப் பட்டதற்கு ஒரு வலிவான சார்பு தேவையாயிருக்கிறது. இது கொண்டே, ஒரு வலிவான பேரறிவுப் பொருள் உலகத்தில் வேறு இருக்க வேண்டும் என்று தேறப்படுகிறது.

உயிரில் ஏதாவது விளக்கம் வேண்டுமென்றால், இந்தப் பேரறிவுப் பொருளின் துணை இன்றியமையாததாயிருக்கிறது. வேறு வாயில் இல்லை. அந்தப் பேரறிவுப் பொருளை, அஃது எல்லாம் கடந்ததாய் இருத்தலின், அறிவுடைய முன்னோர், 'கடவுள்' என்று தெளிந்து, பெயரிட்டு, வேண்டி வரலானார்கள். வேண்டினால் ஆக்கம் விரைவில் கிடைக்கும்.

வேண்டி வருவது ஏதோ அவர்கள் தேவைக்குத்தான்; தேவையில்லாவிட்டால் வேண்ட மாட்டார்கள்.

1. உடலுக்குத் தேவை, தொழிற் பயிற்சிகள்;

2. மனத்துக்குத் தேவை, கல்வி கலைப் பயிற்சிகள்;

3. உயிருக்குத் தேவை, ஒழுங்கு ஒழுக்கங்கள்;

4. அருளுக்குத் தேவை, உயிரின் பொதுமை உயிரிரக்கம் முதலிய உயிரின் பக்குவ நிலைகள்;

5. கடவுளுக்குத் தேவை, உயிரின் தூய்மை, புதுமை முதலிய நலன்கள்!

இத் தேவைகளில், உடல் நலமாய் இருக்கவேண்டுமானால் தொழிற் பயிற்சிகள் இன்றியமையாதன; மனம் செழுமையாய் இருக்க வேண்டுமானால், கல்வி கலை நலன்கள் முதன்மை யானவை; 'உடல்' 'மனம்' என்னும் இருவகை உடல் நலன் களும் உயிருக்கு ஊற்றந் தரும்; அங்ஙனமே அருள் கடவுள் என்னும் இறை நலன்களும் உயிருக்கு மாட்சிமை ஊட்டும்.

முன்னும் பின்னுமாக இவை இரண்டிரண்டும் உதவுவதற்கு உயிர் தன்னிலையில் திறம் பெற்றிருக்க வேண்டும். அந்தத் திறந்தான் 'ஒழுங்கு' என்னும் நீதித் திறனும், 'ஒழுக்கம்' என்னும் நன்மைத் திறங்களுமாகும்.

இவற்றில், மக்களிற் பெரும்பாலோர் அறிபவை, தொழிற் பயிற்சி, கல்விப் பயிற்சி, ஒழுங்குடைமை என்பன மட்டுமே.

இவற்றிலும், மனப் பயிற்சியில் கலை நலன்களும் உயிர்ப் பயிற்சியில் ஒழுக்க நலன்களும் பெரும்பாலும் மக்கள் அறியார்; உடற்பயிற்சியிற் கூடப் பொருளவாக் காரணமாக, அளவுக்கு மேற்பட்ட தொழிற் பயிற்சிகளை மேற்கொள்வதே வழக்கமாக இருக்கிறது.

ஆசிரியர் மறைமலையடிகளின் வரலாறு மாட்சிமைப் படுவதே இந்த நிலையிலிருந்துதான்; மேனாட்டுப் பெரு மக்களாகிய சேக்குவீயர், மிலிடன், சான்சன் முதலிய பேரறிஞர் களின் வரலாறுகள் இன்னும் மாட்சிமை உண்டாக எழுதப்பட வேண்டும் என்பது என் கருத்து. அறிஞர் பலரால் பதிப்பிக்கப் பட்டுப் பல பதிப்புக்கள் வெளிவந்து, உலகமெலாம் பரவி யுள்ளனவேயானாலும், அவற்றைக் கொண்டே மலைத்து விடுவதற்கில்லை; இன்னும் எவ்வளவோ குறிக்க வேண்டி யுள்ளன என்றுதான் தோன்றுகிறது. பெரும்பாலும் அவர்கள் ஆற்றல்களெல்லாம் (Talents) 'உடல்நிலை' 'மனநிலை' என்னும் இருவகைச் சிறப்புகளைப் பொறுத்தன; உயிர் நிலையில், ஒரு சிறு பகுதியே கைவந்தவை எனலாம்.

உயிர் நிலையிலும், 'அருள்' 'கடவுள்' என்னும் இறை நிலையிலும் மேம்பட்ட பெரியோர்களாகிய 'ஏசு' 'முகமது' போன்றோர் வரலாறுகள் மாட்சிமையாக உள்ளனவேனும், அவற்றிலும், பிரித்துக் குறிக்கத்தக்க பகுதிகள் இன்னும் உள்ளன; நமது நாட்டில் பெரிய புராண வரலாறுகள் மாட்சிமை யாக எழுதப்பட்டுள்ளன; ஆயினும், விளக்கித் தெளிவுபடுத்த வேண்டிய கருத்துக்கள் அவற்றிலும் உள்ளன. நாயன்மார் சிலர்க்கு யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் இவ் வகையிற் செய்திருக்கும் தொண்டு பின்பற்றுதற்குரியது; வரலாற்று முறையிலும் அது மாட்சிமைப்படும் வகையிலும் பெரிய புராண வரலாறுகள் செய்யுள் நுட்பங்களுடன் வெளி வருதல் இன்றியமையாதது! இராமலிங்க அடிகளார் முன்னோர் நிலைகளைத் தெளிவுபடுத்துவதில் கூடிய வரையில் தமது நோக்கத்தை ஊக்கமாய்ச் செலுத்தியிருக்கிறார்கள்.

உடல் மன நுகர்வுகளை உலகத் திளைப்பு என (உலகா நுபவம்) ஒரு பகுதியாகவும், உயிர் நுகர்வுகளை உயிர்த் திளைப்பு (உயிரநுபவம்) என ஒரு பகுதியாகவும், மற்ற இரண்டையும் அருள் திளைப்பு (அருளநுபவம்), சிவத் திளைப்பு (சிவவநுபவம்), என இரு வகைகளாகவும், பிரித்துத் தெளிவு படுத்தியவர் அப் பெருமானே! அவருக்கு முன் அப்படி யாரும் பிரித்து விளக்கிய வர்கள் இல்லை.

ஆசிரியர் மறைமலையடிகளார் வாழ்க்கை முறையும் அது மாட்சிமைபட்ட வகையும் ஒரு தனிச் சிறப்புடையவை. பெரிய புராண அடியார்களுடன் சேர்த்து ஒருங்கு மதித்துப் போற்றிக் கொள்ளத் தக்க அருமைப்பாடுடையவை!

அடிகளார் வரலாறு, சுந்தரர் வரலாறு போன்றது; சுந்தரர் அழகு செய்து கொள்வதை ஒரு பயிற்சி முறையாகக் கொண் டிருந்தார்; அழகுகலை பயில்வதற்குச் சிலப்பதிகாரத்து மாதவிக்கு ஏழாண்டுகள் பிடித்தனவென்று சிலப்பதிகாரம் கூறும்;

"ஆடலும் பாடலும் அழகும் என்றிக்
கூறிய மூன்றின் ஒன்று குறைபடாமல்
ஏழு ஆண்டு இயற்றி"

என்பது இளங்கோவடிகள் பொன்மொழி! அடிகளா ரிருந்தும், அழகுகலை முதலியவற்றையும் கோவலனது கலை யுள்ளத்தையும் அவர் நினைவு கூர்ந்து மொழிந்தமையும், அது முதலிய சிலவற்றை அவர் குற்றமாகக் கொள்ளாமையும் நினைவு கூர்தற்குரியன.

சுந்தரர் காலத்து 'விறன்மிண்டர்' 'கலிக்காமர்' முதலி யோரைப்போல் மறைமலையடிகளார் காலத்தும் கருத்து வேறு பட்ட நல்லன்பர் சிலர் விளங்கினர்; இறைவனுக்கு மெய்ம்மை தெரியுமாதலின், எல்லாரையும் அவர் இனிது உய்வித்தருளினர். அதனை மக்கள் நுணுகி அறிந்துகொள்வது அவரவர் வாழ்க்கைச் சிறப்புக்கு மிகவும் உதவியாய் இருக்கும். 'வரலாறு' என்பது எல்லார்க்கும் உண்டு; ஆனால் அதனை மாட்சிமை செய்து கொள்வது சிலர்க்கே அமைகின்றது; அவரே சான்றோர்!

ஆசிரியரடிகளார் எந்தப் பயிற்சியையும் திட்டமிட்டும் அளவறிந்தும் அன்றாடப் பழக்கமாக ஒழுங்காகப் பயின்று வருவார்; அதனால் அழகு நலன்கள் எல்லாத் துறைகளிலும் நிறைந்து வீறிவந்தன.

க. உடல் விளக்கம் (உடலில் நாகரிகம்)

இயற்கையாகவே அடிகளார் நீண்டு உயர்ந்த மெல்லிய வாழைத் தண்டுபோன்ற அழகிய நல்லுடல் படைத்தவர்; நிறம், செந்தாமரை நிறமாக இருக்கும். பெண்மை உடல் என்றே சொல்லிவிடலாம்; குரலும், குயில்போல் இசைக்குங் கீச்சுக்குரல்; பேசும் நிலையே, இசைமிழற்றிப் பாடும் நிலையை உண்டாக்கி இனிமை மிகுக்கும். மோகனம், பைரவி, தோடி முதலிய சில பண்களும் அவர்களுக்குத் தெரியும். அவைக்களங்களில் நின்று, விரிவுரை ஆற்றும்போது, திருமுறைப் பாடல்களைப் பண்களோடுதாம் பாடுவார்கள். அப்போதும், இருக்கையில் அமர்ந்திருக்கும்போதும், படிக்கும்போதும், எழுதும்போதும் அவர்கள் கோலத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போலத் தோன்றும்.

அடியேன் தொடர்பு கொண்டதிலிருந்து, நான் கண்டவை, திருநீறும், பொற்சங்கிலி பின்னிய கழுத்துச் சிவமணியும், வெளிறிய சிவப்பமைந்த அழகான காவி ஆடைகளுந்தாம்; இந்த எளிய திருக்கோலம் சிவநிலைக் கோலமாய் அவருடைய அழகை எப்போதும் மிகுத்துக்கொண்டிருந்தது. "Beauty lies in simplicity" என்னும் உண்மையை, நான் மிக நன்றாக இவர்கள் திறத்திற் கண்டு மகிழ்ந்திருக்கிறேன்.

காவியாடை அணிவதற்கு முன், சிவக்கோலம் தழுவுவ தற்கு முன், காது முதலியவற்றிற்குச் சில அணிகலன்கள் அவர்கள் அணிந்து வந்ததாகக் கேள்விப்பட்டேன். எனக்கு அப்போது 20 வயது ஆகியிருக்கலாம். அக்காலத்திலெல்லாம் நான் சூளைம்பேட்டில் அலுவலில் இருந்தேன். எனக்குப், பாடம் கேட்கும் மாணவர் சிலர் அமைந்தனர். விரிவுரை கேட்கும்

அன்பர்களும் பலர் அமைந்தார்கள். பாடம் கேட்கும் மாணவர் களில் தட்டார் ஒருவர் சுப்பிரமணிய ஆச்சாரியார் என்பவர்; சூனம்பேடு குறுநில மன்னரின் உவளக மகளிர்க்கு வேலைப் பாடான அணிகலன்கள் இழைத்துத் தரும் கைத்திறன் படைத் தவர். அவர்தாம் எனக்கு அடிகளார் திருவடிகளை வெள்ளியிற் செய்து தந்தவர். அவை மிகக் கவர்ச்சியாய் இருந்தன. அவர், அன்பு காரணமாக எனக்குக் காதணிகள், கையணிகள், பொற்சங்கிலிகள், பெயர் பொறித்த பொன் மோதிரங்கள் முதலியன ஒன்றொன்றாக அரிய வேலைப்பாடுகளுடனும் ஆவ லுடனும் விலையின்றிச் செய்து வழங்கினார்.

மாணவர் அன்பை அடிகளார்க்குப் புலப்படுத்தவோ, அணிகலன்களின் அமைப்பை அடிகளார்க்கு விளக்கவோ அடி யேனுக்கு எப்போதும் எண்ணம் எழுந்ததில்லை; பல்லாவரம் போகும்போது ஒருமுறை இவற்றை இயல்பாக அணிந்து கொண்டு செல்ல நேர்ந்தது. திருமணம் ஆகாத நேரமா தலால் என் பெற்றோரும் இதற்குத் தடை செய்யவில்லை.

அடிகளார் முதல் நாள் இதைப் பார்த்துவிட்டு இரண்டாம் நாள், 'மாணுக்கர்க்கு இவை மிகை' என்றார்கள்.

அடிகளார் உள்ளம், அதிலும் என்பொருட்டுக் குறைபடக் கூடாது என்பதே என் எண்ணம். அப்போதே எல்லாவற் றையும் கழற்றி அடிகளார் திருவடிகளின்முன் வைத்து விட்டேன். 'பெற்றோரைக் கேட்டுச் செய்' என்றார்கள்; முற்றும் கழற்றிவிட்டமையால், அன்றுமுதல் இன்றுவரை எவ்வகையான அணிகலன்களையும், வசதியிருந்தும், அணிந்துகொள்ளவில்லை.

> "முப்பதாம் ஆண்டு அளவில் மூன்று அற்று ஒரு பொருளைத் தப்பாமல்"

பிடித்தல் வேண்டுமென்று முன்னோர் அருளிச் செய்தபடி, இயல்பாகவே மிக நீண்டு வளர்ந்திருந்த என் கருங்குழல் முடிக் கற்றையை, இளமையிற் பிறங்கிய என் மனைவி உள்ளம் வருந்தி அழ அழ நறுக்கிக்கொண்டேன். அன்றுமுதல் மேலாடை கீழாடை என இரண்டு வெண் துண்டுகள் தவிரச் சட்டை முதலிய எதுவுங்கூட அணிந்துகொண்டதில்லை; எளிமைத் திறம் என்னையும் ஆட்கொண்டது.

அக்காலங்களில் மிகவும் நெருக்கம் கொண்டிருந்த பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் சென்னையிலும் திருநெல்வேலியிலும் என் நிலைமையைக் கண்டு பாராட்டியதும் உண்டு.

அடிகளார் நாள்தோறும் இருமுறை நீராடும் நாகரிகச் செவ்வியர்; அவ்வப்போதும் நன்கு துவைத்துலர்ந்த காவி

ஆடைகளையே அணிந்துகொள்வார்கள். உடலின் வெளிப் புறம் போலவே உட்புறமும் அன்றாடம் தூய்மை செய்து கொள்ளும் அறுதியான தீர்மானம் கொண்டு இறுதிவரை செயற்படுத்தி வந்தார்கள்.

கிழமைக்கு இருமுறை, 'பசும்பால்' 'எலுமிச்சம்பழச் சாறு' 'வாதுமைப் பருப்பு' 'கசகசா' 'வெள்ளை மிளகு' சேர்த்து மை போல் அரைத்த ஒரு வகையான 'கல்பம்' என்னும் குழப்பு காய்ச்சி உச்சந் தலையில் மெல்லத் தேய்த்துக்கொண்டு இளஞ் சூடான வெந்நீரில் அடிகளார் தலை முழுகுவதுண்டு. பல்லா வரத்தில் தங்கியபோது ஒருகால் நானும் அதைத் தேய்த்துக் கொள்ள விரும்பினேன். ஆனல் அடிகளார் அப்போது இடந் தரவில்லை. பிற்காலத்தில் என் மனைவி அதனையே கையாண்டு தேய்த்து நலம் பெருக்கி வருகின்ருர்.

வழிபாட்டறையில் ஒளி பெருக்கும் இருப்புச் சட்டியும் அத னடியில் முக்கோண இருப்புக் கோலும் வைத்து அவற்றின் முன் சிறிது நேரம் புறநினைவில் அக உடம்பின் வழிபாடு செய்து, அதன்பின் இறைவன் அருள் ஒளியையும், அதற்குப்பின் அதனையும் மறந்து புதுமைச் சிவ ஒளியையும் தேனித்துக் கொண்டிருந்து, நினைவு விட்டபின், ஏறத்தாழ ஒரு மணி அளவில் அறையிலிருந்து அடிகளார் வெளிவருவார்கள். அருமையான 'சாம்பிராணி' மணம் அவர்கள் உடலிலும் சூழ லிலும் இடைவிடாமல் மணங்கமழும்.

சுவர்களில் 'இரவிவர்மர்' எழுதிய, அழகிய முழு முதற் கடவுளின் தோற்றங்களையும், வாயிற்படியின் உயரத்தில் அமைத்துள்ள முழு முதற் திருவுருவங்களையும் தலைமேல் இரு கை கூப்பி, இசை பொருந்திய திருமுறைப் பாடல்களை அழகாக இசைத்து வணங்கியபடியாய் வலம் வந்து, அதன்மேல் காலை பதினெரு மணியளவிலும் அப்படியே இரவில் பதினெரு மணி யளவிலும் ஏதேனும் கஞ்சியும், உலர்த்திப் பக்குவப்படுத்தப் பட்ட பேரீச்சம் பழங்கள் சிலவும் உட்கொள்ள அமர்வார்கள்.

ஒருகால், தமக்குக் காவியாடை அழகாய் இருப்பதோடு, செலவில்லாமலும் இருக்கின்றதென்று அவற்றின் எளிமையை எடுத்துச் சொன்னதோடு சுவாமி உருத்திரகோட்டீசர், சுவாமி விபுலானந்தர் முதலியோரையும் ஒப்புமைப்படுத்திச் சிறப்பித் தார்கள். செந்நெறி நிற்கும் சிவநெறியாளர்க்கு அவர்தம் அகம் சிவத்தைப்பற்றி நிற்கும் புற அடையாளமாக இச் செங்காவி யாடை, மற்றப் பொதுமக்களிலிருந்தும் மற்றப் பல மதத்தவர்களிலிருந்தும் பிரித்துச் சிறப்பிக்கின்றதென்றும் தெரிவிப்பார்கள். எனது புல்லிய நிலைமையை அறிந்தும்,

'இளவழகனுக்கும் துறவுள்ளம் இருக்கிறது' என்று பாராட்டுவ துண்டு.

அச்சுத் தொழிலில் எல்லா வகைகளிலும் அடிகளார்க்குத் தொழிற்பயிற்சி உண்டு. அன்றுடம் சிறிது நேரம் புத்தகங் களுக்கு அட்டை போடுதல், தூசு தட்டுதல், விளக்குத் துடைத்தல் முதலிய கைப்பயிற்சிகளிலும் ஒழுங்குமுறை தவ ருமல் செய்து வருவார்கள்.

சென்னைக்கும், தமிழகத்தின் நகர்களுக்கும், பாடல் பெற்ற தலங்களுக்கும் அவ்வப்போது அடிகளார் சென்று வருவார்கள். விசையோடு வரும் நீரோட்டங்களில் எதிர்நிலையில் இருந்து அலைகளால் உந்தப்பெற்றுக் குளிர்ந்த நீரில் தாராளமாய் நீந்தித் தலை முழுகுவார்கள். திருக்கோயில்களை வலம் வந்து கீழ் வீழ்ந்து வணங்குவதற்கு நாணமாட்டார்கள்.

தஞ்சாவூருக்கு ஒருமுறை அடிகளோடு சென்றிருந்தபோது நான் மட்டும் திருவையாற்றுக்குச் சென்று திரும்பினேன்; உடல் சிறிது காய்ச்சல்போல் இருந்தது. ஆடிமாதம் காவிரியில் புதுப்புனல் பொங்கிப் பொங்கி வந்தது. படித்துறையில் இறங்கிச் சிறிது நீர் மட்டும் எடுத்துத் தலையில் தெளித்துக் கொண்டு ஆண்டவனை வழிபட்டுத் திரும்பினேன். போய்வந்த செய்தியை அடிகளார் கேட்டார்கள்; சொன்னேன்; திட்டி னர்கள்; 'காவிரியில் புதுப்புனல் ஆடுவது எல்லார்க்கும் வழக்க மாய் இருக்க, நீ அதனை இழந்து விட்டாயே; நின் காய்ச்ச லெல்லாம் ஒழிந்திருக்குமே; கிடைத்தற்கரிய ஒரு நற்பேறு கை நழுவி விட்டதே, அதுவும் திருவையாற்றுக் காவிரி மிகச் சிறந்த இடமாயிற்றே' என்று சொல்லிச் சொல்லி வருந்தினர்கள். நீர் விளையாடுதலில் அத்தகைய பேரார்வம் அவர்களுக்கு உண்டு. த. வே. உமாமகேசனர், காய்ச்சலுக்கு ஏதோ மருந்து வாங்கித் தந்ததாக நினைவு! செய்யும் பயிற்சிகளை அழுகையில் லாமல் மகிழ்ச்சியோடு செய்ய வேண்டுமென்றும் அடிக்கடி அறிவுறுத்துவார்கள்.

கருக்கல் நேரங்களில் தம்முள் இருள் கலக்காதபடி ஒளி வீசிற் கூடியிருந்து, ஒளி நினைவோடு உடல் விளக்கம் செய்து கொள்வது நாளும் அடிகளுக்கு வழக்கம்; அதனலேயே தன்னிருள் வரையில் ஒவ்வொரு நாளும் உறங்காமல் கண் விழித்திருந்து, இருள் கலந்து ஒளி கூடிவருகின்ற பின்னிரவில் மட்டும் சில மணி நேரம் உறங்குவதும், சூரிய ஒளி விடியலில் நன்ருய்ச் சுடர் வீசிய பின்பு ஒளி நினைவோடு விழித்தெழுவதும், ஒளிப் பொருளாகிய கண்ணடி, உயர்ந்த படங்கள், முதலிய வற்றைக் காண்பதும், அவர்கள் முறைமையாய் இருந்தன.

அதனால் அவர்கள் மேனி, நிறத்தால் மட்டுமன்றி, மின்னல் வீச்சுப் பளபள வென்று எழுந்து, மேனி மினுமினு வென்று சூழச் சுடர் வீசிக்கொண் டிருக்கும்; உள்ளம் ஒளி வண்ண மாகவே விளங்கிக்கொண் டிருக்கும்.

காலையில் எழுந்ததும் தம் திருவடிகளை வெண்ணிறச் சோடுகளில் நுழைத்துக் கொண்டு வெளிவந்து, மிதியடிகள் பூண்டு தமது மாளிகைத் தோட்டத்தில் சுற்றிச் சுற்றி உலாவி வருவார்கள். காலையில் மட்டுமன்றி மாலையிலும், 'பொதுநிலைக் கழக மாளிகை' ஏரி ஓரம் அமைந்திருந்தமையால், அதன் அருகிலும் மிதியடிகளுடன் உலாவி வருவார்கள்; அவர்கள் உரிமையை யாரும் கட்டுப்படுத்துதல் கூடாது; அவர்கள் நோக்கங்களைப் பிறர் எளிதில் புரிந்து கொள்ளுதல் இயலாது.

அக் காலங்களிற்கூட அழகாக நடப்பதை ஒரு பயிற்சி யாகக் கொண்டு மறவாமல் பயின்றுவருவார்கள்.

எனக்குத் தம்பி ஒருவர் இருந்தார். அவர்க்கு இயற்கை யறிவு மிகுதி; 'வேதாசலம்' என்னும் பிள்ளைப் பெயரை அடிகளார் சார்பால் 'மறைமலை' என்று மாற்றிக் கொண்டார். அடிகளார் நடப்பதைப் போலவே அழகாக நடந்து காட்டி எல்லாரையும் களிப்பிப்பார். கள்ளம் கவடற்ற அவர் உள்ளத்தை அடிகளார் பெரிதும் விரும்புவதுண்டு; ஒருகால் சென்னைக் கோவிந்தப்ப நாயக்கன் தெருவில் 'சவுந்தரியமால்' மாளிகை மேடையில் 'பதி பசு பாசம்' பற்றி அடிகளார் பேச் சொன்று நிகழ்ந்தது. மேடைக்குச் செல்லும் படிக்கட்டுகள் அகலம் குறைந்தவை; அந்த இடுக்கு வழியில் ஏறிச் செல்லும் போதும் அடிகளார் தம் நடையழகுப் பயிற்சியைக் கைவிட வில்லை. இது சிறிய நிகழ்ச்சியே யானாலும் அடிகளாரின் 'கவின் கலைப்' பயிற்சியை எல்லார்க்கும் எடுத்துக் காட்டுவதா யிருத்தலின், இங்கே எடுத்துக்கூற வேண்டுவது இன்றியமை யாததாயிற்று; தரையில் அவர்கள் பாதம் எப்போதும் படுவ தில்லை; இஃது அவர்கள் மின்னாற்றலை மிகுதிப்படுத்திக் கொண் டிருந்தது.

புத்தகங்களைக் கையாளும் முறையில் அவர்கள் மிக்க ஒழுங்குடையவர்கள்; கண்ட இடங்களில் நூல்கள் இறைந்து கிடக்கும்படி சோம்பராக இருக்கமாட்டார்கள். மெய்வருத்தம் பாராமல், அவ்வப்போதும் எழுந்து சென்று, தாமே அவற்றை ஒழுங்குப்படுத்துவார்கள். இஃது ஓர் உடற்பயிற்சியாய் எப்போதும் சிறப்புடன் நடந்து வந்தது; எந்த நேரத்திற் பார்த்தாலும் அவர்கள் நூல்நிலையம், புத்தகங்கள் கொலு வைத்ததுபோல் அடுக்கடுக்காய்க் காட்சி நல்கும்.

அவர்கள் உண்பது பகலில் ஒருவேளை உணவுதான்; ஆயினும் அது, பலவகை உய்வனவுகளுடன் (Vitamins) நிரமபி யிருக்கும். 'தேங்காய்ப் பால்' 'உருளைக்கிழங்கு' 'பசு நெய்' முதலியவற்றிற்கும், சாறு ஒழுகும் 'பலாச் சுளை' 'நாரத்தைச் சுளை' 'மல்கோவா' 'பீத்தர்' 'மலைப்பழம்' 'வித்துக் குறைந்த கொடி முந்திரி' முதலியவற்றிற்கும், 'வாதுமைப் பருப்பு' 'முந்திரிப் பருப்பு' 'பூக்கோசு' 'இலைக்கோசு' 'பச்சைப் பட்டாணி' 'மஞ்சள் முள்ளங்கி' நன்கு பழுத்த 'எலுமிச்சம் பழம்' 'தக்காளிப் பழம்' முதலியவற்றிற்கும் குறைவிராது.

ஒவ்வொரு நாளும் கையலம்பும்போது நெய்ப்பசை நீங்கும் பொருட்டு ஒரு தட்டில் 'சீயக்காய்த் தூளும்' 'மைசூர்ச் சந்தனக் கட்டியும்' இளஞ்சூடாக வெந்நீர் நிரப்பிய பெரிய நீர்ச்செம்பும், வெளியில் ஆயத்தமாய் இருக்கும்.

ஆவிக் குளியல், தொட்டிக் குளியலும் அன்றாடம் இரு வேளையும் 'நீர் ஏற்றி' கொண்டு குடற்கழுவலும் உண்டு.

ஒருநாள் நான் இக் குடற்கழுவல் பற்றி வினவினேன்; இது மிகத் தொல்லையான செயற்கை முறையாய் இருக்கிறதே என்று கேட்டேன்; அதற்கு அவர்கள், 'ஒரு நாளைக்குப் பல வேளை உண்பதும், அதன் பொருட்டு நாளெல்லாம் ஓயாமல் பொருள் திரட்டுவதும் செயற்கையா, இயற்கையா' என்று கேட்டார்கள்.

அவர்களாகவே ஒருநாள், 'என் முறைகள் ஆங்கில நன் முறைகள்; இவை பழைய தமிழ் முறையே; ஆங்கில முறையும் தமிழ் முறையும் பெரும்பாலும் ஒத்தவை; கருவிகள் மட்டும் வேறு வேறு; பழைய தமிழ் முறையில் அன்றாடம் சில பச்சிலை களைச் சித்தர்கள் உண்பதுண்டு. நகரங்களில் அவை கிடைப்பது அரிதாகி விட்டன' என்று சொன்னார்கள்.

௨. மன விளக்கம் (மனத்தில் நாகரிகம்)

பருஉடலில் நாகரிகமாய் விளங்கியது போலவே நுண் ணுடலாகிய மனத்திலும், 'கல்வி' 'கலை' முதலிய பயிற்சி களால் நாகரிகத்தை அடிகளார் அன்றாடம் நிரப்பி வந் தார்கள்.

இன்னின்ன நூல் இன்னின்ன நாளில் படிப்பது என்று ஓர் ஒழுங்கை அடிகளார் அமைத்துக் கொண்டு அந்த அட்டவணைப் படியே ஒவ்வொரு நாள் மாலையிலும் 6½ யிலிருந்து 9 மணிவரை கலைகள் பயின்று வருவார்கள்;

இந்த மனப்பயிற்சி இறுதி வரையில் நடந்துகொண்டிருந்தது. அவர்கள் நாட்குறிப்பில் 'இன்று படிக்கப்பட்டது' என்னும் குறிப்பு, கடைசிவரையில் எழுதப்பட்டிருந்தது.

கொசுக்கள் தொல்லை இருந்தாலும் ஒரு கையால் விசிறிக்கொண்டே, விடாமல் படிப்பார்கள்.

தாழ்வாரத்தில் நின்றுகொண்டு நான் இக் காட்சியைப் பார்த்து, மிகவும் இரக்கப்படுவேன்.

"சாந்துணையும் கல்லாதவாறு என்"

என்று திருவள்ளுவர் கூறிய பொய்யா மொழியை, அடிகளார் இந்த வயதிலும் எவ்வளவு அக்கறையாகக் கடைப்பிடிக்கிறார்கள் என்று வியப்பேன்;

கொசுத் தொல்லையில், இவ்வளவு கடின சோதனையிலும் அடிகளார் கல்வி பயின்று, அரிய எழுத்திலும் இனிய பேச்சிலும் ஆராய்ச்சியோடு உண்மைகளைத் தழுவி அறம் உரைக்கிறார்களே. இந்த அருமையைத் தமிழகமும், தலைவர் என்போரும், அரசும், சரியானபடி இன்னும் அறிந்துகொள்ளவில்லையே என்று எண்ணுவேன்; பொருள் தேடுவதற்காகமட்டும் அடிகளார் கலை பயில்வதானால் எவ்வளவு வளமாக வாழலாம்; 'உண்மை கடைப்பிடிப்பது' 'அறமே உரைப்பது' என்பதில் எவ்வளவு பொருள் இழப்புகள் உண்டு என்பதைச் சற்றேனும் தமிழகம் எண்ணிப் பார்க்கவில்லையே; தமிழகத்தில் யார் யார் உண்மைக் கலைஞர்? தமிழுக்கும் அறத்துக்கும் தொண்டு செய்வோர்? என்பதைத் தமிழகமே அறியாமல் இருப்பது எவ்வளவு இரங்கத் தக்கது! எவ்வளவு மானக் கேடு? தமிழகத்தில் பொருள் மிகுதியாய்ப் படைத்த பெருஞ் செல்வர்கள் கூடப் பராமுகமாய் இருக்கிறார்களே, பலவேறு வகையான சூழ்ச்சிகளில் சிக்குண்டு பொருள்களை வீணுக்கு வாரி இறைக்கிறார்களே தவிர, நேர்மைக்கும் உண்மைக்கும் உதவ முன்வரவில்லையே!

"தாளாற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்" கல்லவா வேளாண்மை செய்ய வேண்டும் என்று திருவள்ளுவர் விளக்க வேண்டிய கட்டாயம் நேர்ந்துவிட்டதே என்றெல்லாம் எண்ணிக்கொண் டிருப்பேன்.

பெருஞ்செல்வர் சிலர் இல்லத்தில், அண்டாக்களைப் போன்ற பெரிய பாண்டங்கள்கூட வெள்ளியிற் செய்து உருண்டுகொண்டிருக்க, இந்த எளிய காவியாடை அடிகள் இங்ஙனம் கொசுத் தொல்லையிலுங் கலைபயின்று அறம் உரைக்கிறார்களே என்றும் தோன்றும்.

இத்தகைய எண்ணங்களால் உள்ளம் கதுவப்பட்டுச், சில வேளைகளில் நான் கண்ணீர் பெருக்கி நிற்பதும் உண்டு.

அடிகளார் திடுமென்று என்னை அழைப்பார்கள்; அலறிப் புடைத்துக்கொண்டு, நினைவு கலந்து, அடிகளார் திருமுன் எய்துவேன்.

என்னை நோக்கி, 'அழுதுகொண் டிருந்தாயா' என்று கேட்பார்கள், அமரும்படி சொல்வார்கள்.

பெரும்பாலும் அடிகளார் திருமுன் பாடவேளைகளிற்கூட நான் அமர்வதில்லை.

திருத்தவத்துறை (லால்குடி) என்னும் தலத்தைச் சார்ந்த சரவண முதலியார் என்னும் பெரியபுராணப் புலவர், அடியேன் எப்போதும் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்து, என்னை அழைக்கும்போதெல்லாம் 'நின்ற திருக்கோலம்' எங்கே என் பார்கள். அடிகளார், புன்னகை கொண்டு 'என்ன சொன்னு லும் இளவழகன் கேட்பதில்லை' என்பார்கள்.

அடிகள் மேன்மேலும் வற்புறுத்தியதனல் கண்களைத் துடைத்துக்கொண்டு, கையற்று, இருக்கையில் சிறிது அமர் வேன். முள்ளிருக்கையில் இருப்பதுபோலத்தான் அது தோன்றும்; நின்றுகொண்டே அடிகள் நூல்களை எப்போதும் பயின்றுகொண் டிருப்பதே என் வழக்கம்;

'ஆங்கில அறிஞர்கள் எவ்வளவு உயர்வான கருத்துக்களை எவ்வளவு உயர்வான நுட்பங்களில் எடுத்து எழுதுகிருர்கள் தெரியுமா?' என்று அவற்றை அடியேன் அறியுமாறு விளக்கிச் சொல்லி மகிழ்வார்கள்.

'நூல்கள் எழுதுவது எனக்கு அவ்வளவு விருப்பமாக இல்லை; தமிழ்நாட்டின் விழிப்புக்காகவே எழுதவேண்டியிருக் கிறது; உயர்ந்த நூல்களைப் படிப்பதும் பயில்வதுமே எனக்கு மிக்க ஆராமையாய் இருக்கிறது' என்று விம்மிதத்தோடு சொல் வார்கள். ஆங்கில நூல்களைப் படித்துக் காட்டுவார்கள்; அடிக ளிடம் ஆங்கில நூல்களின் நுட்பங்களும் அமைதிகளும் சில அவ்வாறு அறிந்துகொள்ள நேர்ந்தது; சமக்கிருதத்தை இங் ஙனம் அவர்கள் படித்துக் காட்டுவதில்லை; சில கற்பனைச் சுவை களைமட்டும் தனியாக எடுத்துக் கூறுவார்கள்.

விடுமுறைக் காலங்களில் நான் பல்லாவரம் சென்று வந்த பயணங்கள் பலப்பல; தொடர்வண்டி பெரும்பாலும் மாலை 7 மணிக்குத்தான் பல்லாவரம் நிலையம் சேர்வது வழக்கம்; அடி களார் மாளிகையுள் நான் நுழையும்போது அவர்கள் படித்துக்

கொண்டிருக்கும் கோலமே என் காட்சிக்குப் படும். ஒரு தடவை கூட அது பொய்த்தது இல்லை.

விடுமுறை அல்லாத காலங்களில் நான் சூளும்பேட்டில் இருக்கும்போது குறுநில மன்னரின் மூன்று தலைமுறைகளாக ஒட்டக்கூத்தரைப் போலத் தொடர்பாக அலுவலில் இருந்து வந்தவர் மலைக்கொழுந்து பிள்ளை என்பவர், மிக்க நம்பிக்கைக் குரியவர்.

முதல் தலைமுறையின் மிட்டாதார் முத்துக்குமாரசாமி முதலியார், யாழப்பாணம் ஆறுமுக நாவலரின சைவ பால பாடங்களிலும் இலக்கணங்களிலும் விருப்பம் வைத்து அழகிய பள்ளிக்கூடம் ஒன்றைத் தொடங்கினார்; தக்க பெருமபுலவர்கட்குத் தேர்வுத் தாள்கள் அனுப்பி முதற்றகுதியில் வரும் மாணவர்க்கு அரிய பரிசுகள் வழங்குவார். அவர் சிறந்த கலை மன்னர்; பெருநில மன்னரைப் போலவே பெருவாழ்வு வாழ்ந்தவர். அவர் காலத்தில் அப் பக்கம் முழுவதும் சைவமும் தமிழும் மணங் கமழ்ந்து வந்தன. அடிகளார் காலம் அதுவாயிருந்திருந்தால் தக்க உதவிகள் பெற்றிருப்பார்!

அவர் பள்ளி, உயர் தொடக்கப்பள்ளியாக முன்னேறி விளங்கியபோதுதான், அவர் மைந்தர் அருணாசல முதலியாரால் நான் அப் பள்ளிக்கு வரவழைக்கப்பட்டேன். அருணாசல முதலியார் தக்க பொருளாளர்; தந்தையார் காலத்தில் 10 ஊர்களுக்குச் சொந்தமாயிருந்த மிட்டா, மைந்தர் காலத்தில் 40 ஊர்களுக்கு மேல் உரிமையுடையதாயிற்று. மைந்தர் அலுவலகத்திலும் மலைக்கொழுந்து பிள்ளை மதிப்புடன் விளங்கினார்; அமைச்சராயிருந்து உதவினார்.

அன்றாடம், அவர், அலுவலகத்திலிருந்து மாலை 7½ மணிக்குத்தான் தம் இல்லம் செல்வார். என் இல்லத்தைத் தாண்டியே அவர் இல்லம் இருந்தது; தெரு அறையில் நான், சங்க இலக்கியங்களிலும் தொல்காப்பிய இலக்கணத்திலும் ஆழ்ந்து மூழ்கியிருந்த காலம்; எல்லாம் அடிகளால் நேர்ந்த பழக்கம்; மலைக்கொழுந்து பிள்ளை ஒரு நாள் விடாமல் அந் நேரத்தில் நான் படித்துக்கொண்டிருக்குங் காட்சியைக் கண்டு கொண்டே செல்வார்; எல்லாரிடத்திலும் மிட்டாதாரரிடத்திலும் இதனைச் சொல்லிச் சொல்லி மகிழ்வார். அருணாசல முதலியார் கடைசி காலத்தில் பாடம் ஒன்றுக்கு 100 வெள்ளி கொடுத்துத் திருமந்திரத்திற் சில பகுதிகளை என்னிடம் பாடங் கேட்டுக் கொண்டார். அவர் தந்தையாருக்கு ஒரே பிள்ளை; ஆனால் அவருக்குப் பிள்ளைகள் மூவர்; பிள்ளைகள் இருப்பதனால், தம்

செலவுக்குரிய பாகத்திலிருந்துமட்டும் திருமந்திரப் பாடத்துக்கு மிகுதியாகக் கொடுக்க முடியவில்லையே என்று வருந்துவார்; கோடைக் காலத்தில் நான் வெயிலில் அலையாதபடி, இருக்கும் இடத்துக்கே பேருந்துவை வருவித்துக் கொடுப்பார். கீழ்ப் பாக்கம் மாளிகையை விட்டுச் சில காலம் அடையாற்று மாளிகையில் அவர் இருந்தபோது, அடிக்கடி என்னை வர வழைத்துக் கொள்வார்.

அடிகளார் மனப்பயிற்சி எப்போதும் மிக உயர்ந்த கலை நூற் பயிற்சிகளாகவே இருக்கும்; உலகத்திலேயே சிறந்த மேதைகள் எழுதிய அரிய கலை நூல்களையே அடிகளார் எப் போதும் பயன்படுத்துவார். அவர்கள் கலைப் பசிக்கு அவை எல்லாம் சற்றும் போதமாட்டா; ஒருவர் முகத்துக்காக அவர்கள் கலை பயில்வதில்லை.

அறிந்தவரையில் அவ்வப்போதும் எல்லாக் கலைகளையும் செயற்படுத்திப் பார்ப்பார்;

இக்காலத்தில் அறிவியற் கலைகள் (Sciences) மிகு மலைப்பாக எண்ணப்படுகின்றன. அவை மக்களுக்குப் பயன்படு கலை களாக (Arts) மாறிப், பலவகைத் தொழில்களாக (Industries) நிகழ்ந்து வருகின்றன. அவை உளப் பயிற்சியிற் சிறந்து நிகழும்போது, 'இசை' 'ஓவியம்' 'கவிதை' முதலிய கவின் கலைகளாக (Fine Arts) ஓங்குகின்றன. அடிகளார் இக் கவின் கலைகளில் மிக வல்லுநர்!

உலகம் முழுவதிலும் உள்ள கவிதைகளோடு நனிபழகி, நம் பழந்தமிழ்க் கவிதைகளையும் ஒப்பிட்டுப் பார்த்து, அறநிலை வழு வாத அழகொளியோடு திகழும் நம் சங்ககாலத் தமிழின் மாட்சிமையைப் பிழிந்தெடுத்து, அவ்வப்போதும் மக்கட்கு வடித்துரைப்பார்; அதைத் தேனென்று சொல்லுவேனோ! தேன் பாகென்றுதான் சொல்லுவேனோ! இன்னதென்று சொல்ல உவமை ஒன்றும் இல்லையே;

உலகத்தின் மேதைகளெல்லாம் பெரும்பாலும் 'மனப் பயிற்சி' என்னும் கல்வி கலைப்பயிற்சியினாலேயே பாராட்டப் பெறுவர்; சிறந்த உலக வரலாறுகளெல்லாம் பெரும்பாலும் இம் முறையையே பின்பற்றுகின்றன. அடிகளார் நிலை, இந்த அளவைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது; நுணுகிப் பழகு வோருக்குத்தான் அருமைகள் தெரியும்; அருகில் இருப்பதால் மட்டும் அறிந்துகொள்ள இயலாது.

அடிகள் ஏதோ ஒரு தனித் தமிழ்ப்பணி கருதித் தமிழகத்தில், அருள் நழுவலாகத் தப்பிப் பிறந்துவிட்டார்கள்; சேற்றில்

பிறந்ததனுல் செந்தாமரைக்கு என்ன இழுக்கு? தமிழகம், கொழுந்தோடிய அவர்கள் கலைச் செழுமையைக் கடைப் பிடித்துக் கொண்டால் போதும்!

சங்கத்தமிழ் நூல்களில் முடிவான சில மெய்ப்பொருள்கள் வடிக்கப்பட்டிருக்கின்றன; முடிந்த பொருள், மன்பதைக்குப் பயன்படுதலே; முடிமணி போன்ற அந்த அறப்பேரழகை யார் அறிவார்?

"நயனில சொல்லினும் சொல்லுக, சான்றோர்
பயனில சொல்லாமை நன்று"

என்னும் பொய்யாச் செம்மொழி, எத்தகைய பேருணர்ச்சியில் எழுந்து திகழவேண்டும் என்பதைக் காண்மின்கள்!

தமிழ்ச் சுவை என்பதை, இப் பொய்யா மறையை ஒட்டி, அடிகள் எவ்வளவு முத்தமிழ்ச் சுவையாய் உணர்ந்திருக்கிறார்கள் தெரியுமா? அறத் தமிழாகிய இயற்றமிழ், அன்புத் தமிழாகிய கவின்கலை இசைத் தமிழாய், அது கொழுந்தோடிய நிலையில் கடவுட் டிறன் பொதிந்து நாடகத் தமிழ்ச் சுவையாய் ஓங்கி யிருப்பதை உணர்ந்த முத்தமிழ்ச் சுவை நெஞ்சமன்றோ அடிகள் நெஞ்சம்!

'சேக்குவீயர்' என்னதான் உயிர்த்திறன் தோயப் பலப் பல நாடகக் கவிதைகள் இயற்றினுலும், 'மிலிடன்' போன்ற பேராசிரியர்கள் எவ்வளவுதான் உயர்ந்த நல்லிசைக் கவிதைகள் இசைத்தெழுதினுலும், உலகத்தில் ஆங்கிலம் போன்ற எம் மொழியும் 'முவ்வாங்கிலம்' முதலிய முச்சுவைப் பெயர்களைப் பெறுமைக்குக், கொழுந்தோடிய சுவைக் காரணம் ஏதோ இருக்கவே வேண்டும்! ஆங்கிலம் முதலியன அழகு மொழிகளேயாயினும் அவிநயச் சுவை. மெய்ப்பாட்டியல், தெய்வ நலம் முதலியன அவற்றிற்கு ஏது? அடிகளார் அதனை நன்கறி வார்கள்; அறிந்துணர்ந்து மகிழ்ந்ததன் அடையாளம், வாழ்க் கையில் கடைசியாக அவர்கள் எழுதிய 'அம்பிகாபதி அமராவதி' நாடகம்; இது, இம் முத்தமிழ்ச் சுவையின் களஞ்சியக் குவியல் அன்றோ? சாகுந்தல நாடக ஆராய்ச்சி போல இந் நாடகத் துக்கும் ஒரு திறனய்வு வெளியீடு உரை விளக்கத்துடன் வெளியிடுதல் இன்றியமையாதது;

அடிகளாரின் வரலாறு எங்ஙனமெல்லாம் மாட்சிமைப் படுகிறது என்பது, தமிழகமட்டுமன்றி உலகமெலாம் பரவும் வகையில் அமையும் நாளே, உலகத்தின் தனித்தமிழ்ச் சிறப்பு நாளாகும். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் அடிகளார் வரலாற்றைக் கையடக்கமாக உலகமெங்கும் பரவச் செய்யும் கடமை உடையது! பொதுமறைப் பதிப்புகள்போல் அது

பெருகுதல் வேண்டும்; அந் நிலையில், உலக மேதைகளின் மெய் வரலாறுகளெல்லாம் வெறும் விண்மீன்களாக ஒளி உமிழ்ந்து சூழ, அவற்றின் நடுவண் அடிகளார் மாண்பு, மாபெரும் தண்ணமிழ்து நிலவாய்ச் சுடர் வீசித் திகழும். அதற்கு உரிய காரிய காரணங்களுடன், வரும் கட்டுரைகளில் விளக்கங்கள் வரும்.

## ௬. உயிர் விளக்கம் (உயிரில் நாகரிகம்)

உலகக் கலை நூல்கள் பெரும்பாலும் உயிர் நிறைவை உடையன அல்ல.

உயிரில் நாகரிகம் நிறைதல் என்பதை அடிகளார் வகை பிரித்து நனிபயின்று சான்றாண்மை நிறைந்தவர்கள்!

உயிரில் திறம் நிறைதல் என்பது, இரு வகைப்படும்; ஒன்று: உயிரின் இயல்பு மேம்படுதல்; மற்றொன்று: மேம்பட்ட அவ்வியல்பில், நலங்கள் நிறைதல்; முன்னதை 'ஒழுங்கு' என்றும், பின்னதை 'ஒழுக்கம்' என்றும் சொல்வதுண்டு.

'ஒழுங்கு' என்பது திருவள்ளுவர் தம் பொதுமறையில் கூறிய ஒழுங்குடைமையாகும்; அந்த அதிகாரத்திற்கு அப்பாற் பட்டனவாய் வரும் அறங்களெல்லாம் ஒழுக்கங்களாகும்.

'உயிர்த் திறம்' என்பது "தீது ஒரீஇ நன்றின்பால் உய்க்"கும் 'நீதித் திறன்' என்னும் அறிவுத் திறன்; உயிரின் அறிவு சிற்றறிவு ஆதலால், அது எவ்வளவுதான் மலம் நீங்கி விளக்கமானாலும் அஃது வரம்புடையதே; விளங்கினால், தன் எல்லை வரையிலேதான் விளங்கும்; அதற்கு மேல் விளங்குவது அதன் இயல்பாகாது.

உயிரின் இவ்வறிவியல்பு, புறம் வந்தால், ஆராய்ச்சி வண்ணமாகி மனம் என்னும் கண்ணாடியில் அதன் உருத் தோன்றும்; பருவுடல், நுண்ணுடல் இரண்டையும் ஆட் கொள்ளும்; இவை சிறப்புற்றால், 'ஊன் உருக்கம்' எனப்படும்; 'ஊன் என்னும் பருவுடலும் நுண்ணுடலும் சிறப்புற்றது' என் பது கருத்து.

அகம் நோக்கினால், 'அன்பு' 'இரக்கம்' (சீவகாருணியம்) என்று மிளிரும்.

'அன்பு' என்பது, தேடும் பொருளெல்லாம் 'தமக்கன்று' எனத் தெளிந்து, தாராளமாய்த் தக்கார் பொருட்டுச் செல வழித்துக்கொண்டிருக்குங் குணம்; 'அன்று' என்பதும் 'அன்பு' என்பதும் ஒரே சொற்பகுதியை உடையன; 'அற்பு' 'அற்புதம்' என்பனவும் 'அன்பு' என்பதன் திரிபுகளே; பிறர்க்காகப் பொருள் தேடும் வகையில், அதற்காகத் தன் உடம்பையும்

சூழலையும் காத்துக்கொள்ளும் தன்னலம், ஒரு சிறிது மட்டும் இந்த அன்புக்கு உண்டு. 'உயிரிரக்கம்' என்னும் அருளுடைமையின் நிலையில் அத் தன்னலமும் இல்லை.

உயிரின் அறிவுநிலை பழக்காய் போன்றது; அது, அன்பாகவும் அருளாகவும் மாறிப் பழமாகவும் கனியாகவும் ஒளி கொள்ளும். இதற்கு ஆண்டவன் திருவருள், உயிரின், விளங்கிய அறிவுக்குத் துணை செய்ய வேண்டும்.

உயிரின் அறிவில் இங்ஙனம் இறை திருவருள் இறங்கி ஒளி கொள்ளுதலையே 'உள்ளொளி பெருக்குதல்' என்று முன்னோர் குறிப்பிடுவர். ஊனினை (பருவுடல் நுண்ணுடல்களை) உருக்கி, 'உள்ளொளி பெருக்குதல்' (உயிர்த்திறம் மிகுத்தல்) என்பர் பெரியோர்; உயிர்த்திறனாகிய அறிவுக்காய், திருவருள் ஒளிப் பதிவால் அன்பும் அருளுமாதல்;

"காயெலாம் கனியெனக் கனிவிக்கும் ஒருபெருங் கருணையமுதே"

என்றருளுவார் வள்ளலார்.

உயிரறிவாகிய ஆராய்ச்சி நீதித்திறன், அன்பு இரக்கம் என்னும் பழமும் கனியுமாய் ஒளிபெறுதல்;

ஆசிரியர் மறைமலையடிகளார், ஒளித் திறனாகிய அறிவு நிலையில் தமக்குரிய எல்லை வரையில் பெருக்கிக் கொள்ளுதலையும் அன்பு அருள் என்னும் உள்ளொளி மிகுத்தலையும் வாழ்க்கையில் பயின்று பயின்று, உயிரிலும் நாகரிகம் உடையவரானார்கள்; திருவள்ளுவர் இவ்வுண்மை தேற்றி,

'ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்'

என்று ஒழுங்கு ஒழுக்கங்களை உயிரின் திறங்களாக வகுத்து, வழிகாட்டி யருளினர். 'மறை நூல்' என்னும் திருக்குறள், உயிரினுண்மைகளை எவ்வளவு சிறப்பாக எடுத்துக் காட்டி உய்விக்கிறது என்பதை இது கொண்டு அறிந்துகொள்ளலாம்.

உயிரின் அறிவுநிலை, அன்பு அருளாய் உள்மடங்கி உயர்ந்து நுணுகி விளங்கி ஒளிகொள்ளுதலே மனிதர்க்கு மாண்பு. பொதுமக்களின் இன்றியமையாத திருத்தங்களுக்காக மட்டுமே ஒரோவொருகால் சான்றோர்க்கு அது, புறம் வரும்.

இனி, அடிகளின் வாழ்க்கையில் இவ் உயிர்ப் பயிற்சிக்கு இரண்டொரு சான்றுகள் எடுத்துக்காட்டுதலும் வேண்டும்;

1911-ல் அடிகளார் கடவுள் ஒருவருக்கே தொண்டு பூண்பது என்று உறுதி கொண்டுவிட்டார். செல்வர்கள் யாரிடமும் பின்னிரந்து நிற்பதில்லை. தம் அருமை யறிந்து எவரேனும்

உதவுவாரானுல் அளவுடன் ஏற்றுக் கொள்வார். அவரவர் பெருமைக்காக எவரேனும் ஏதும் உதவ முன் வந்தால் அதனைக் கண்ணெடுத்தும் பாரார். ஒருகால் சேயூரைச் சேர்ந்த செல்வ ரொருவர் தமக்குரிய தம் பெருமை தோன்ற ஆரவாரத்துடன் நன்கொடைப் பொருள் முந்நூறு வெள்ளி அளிக்க முன் வந்தார். அடிகளுக்கு அது தேவையான நேரந்தான். ஆயினும், அதனை அவர் எடுத்துக்கொள்ள வில்லை; திருப்பி விட்டார். வந்தவர் தம் ஆரவாரத்தைக் குறைத்துக்கொண்டு மிகுதியும் வேண்டிக் கொண்டமையால், அடிகளார் தம் செல வுக்குத் தேவையான இருபத்தைந்து வெள்ளிமட்டும் எடுத்துக் கொண்டு மற்றதை அவரிடமே வழங்கிவிட்டார்.

செல்வர் பின் செல்லாத மானமுடையவர் அடிகளார். பேரூர் சாந்தலிங்க மடத்தின் ஆண்டுவிழா ஒன்றிற்குச் சென் றிருந்தபோது, கல்லூரி மாணவராய்க் கோவையில் பெருஞ் செல்வராய் ஆலை முதலாளியாய் விளங்கிய இராமலிங்கர் என்பவர் தம் இல்லம் போதருமாறு அடிகளுக்கு வண்டியனுப்பி வைத்தார். அடிகள் செல்லவில்லை. பல்லாவரம் திரும்பியபின் மிகவும் ஏழையான அன்பரொருவர் அங்கப்பரிடம், அன்பும் அருளும் கூர்ந்து அவரில்லம் சென்று அவர் அமைத்த சிறு திருக்கோயிலின் குடமுழுக்கிலுங் கலந்துகொண்டார்.

உயிரின் அறிவுநிலை, அன்பு அருள்நிலைப் பயிற்சிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகளாக அடிகளார் இங்ஙனம் நடந்து கொண்ட நிலைகள் பலப்பல.

### ச. திருவருள் விளக்கம் (அருள்நிலையில் நாகரிகம்)

மனிதற்கு 'மாந்தன்' என்றொரு சிறப்புப் பெயருண்டு. மனம் படைத்தவர் 'மனிதர்' 'மானவர்' எனப்படுவர். ஆனுல் அப்பெயர்களைவிட 'மாந்தன்' என்னும் பெயர் சிறந்தது. 'துய்ப்பவன்' என்பது அதன் பொருள். 'மாந்து'தல் துய்த்த லாகும்.

'உயிர்' என்னும் சொல்லும் அக்கருத்து உடையதே. உய்தல் உயிர்த்தலாகும். 'முததிதனில் மூன்று முதலும் என்னும் மெய்கண்ட நூற் பாடலில் 'துய்த்தல் அணு' என்னும் உயிரினியல்பு கூறப்படுகிறது.

இங்ஙனம் அறிவறிந்த மாந்தர், ஒரு பக்கம் பருவுடல் நுண்ணுடல்களையும் மற்றொரு பக்கம் திருவருள் கடவுள்நிலை என்பவற்றையும் மாந்தும் தன்மை யுடையர். உயிரின் அறிவுநிலை, அன்பும் அருளுமாய்க் கனிவடைந்தபின், எய்தும் அரிய பேறுகள் இவை !

திருவருள் நிலைக்கும் கடவுள் நிலைக்கும் தம்பொருட்டுத் தேவைகள் எவையுமில்லை; ஆயினும் உயிர்களின் பொருட்டு உயிர்களின் இயல்பில், பொதுமையும் புதுமையும் நிறைப்பது இன்றியமையாதன.

இவ்விரண்டும் முறையே அம்மையப்பர் என்னும் ஆண் பெண் இயல்புடையன.

அறிவுநிலை என்று எடுத்துக்கொண்டால், ஆண் பெண்பாகு பாடுகள் எல்லா உயிர்களிலும் இயல்பாகக் காணப்படுகின்றன. 'உயிரென்றால் அறிவுடையது; அறிவுடையது என்றால் ஆண் பெண் அமைப்புடையது' என்பது காட்சியில் தெளிவாயிருக் கிறது. அகத்துக் கேற்றபடியே புறம் அமைதலின், உயிரிலேயே ஆண் பெண் அமைப்பு இல்லையென்றால் உடம்பிலும் அமைய வாய்ப்பில்லை. அறிவுடைய உயிர்ப்பொருள் ஒவ்வொன்றும் இதனால் தம்மில் ஆண் பெண் அமைப்புடையன என்று துணிய வேண்டியிருக்கிறது.

ஓராவிற்கு இருகோடு முளைத்து இரண்டும் ஒன்றை யொன்று நோக்கிக்கொண் டிருப்பதும், ஒரு காகத்தின் இரு கண்களுக்கு ஒரு மணியே ஊடாடி இருகண் பார்வையும் ஒரு பார்வையா யிருந்து வருவதும் காட்சியில் தெரிகின்றது.

பருவுடல் நுண்ணுடல் என்னும் இரண்டும் எப்படி உடல் என்று பெயர் பெறுகின்றனவோ, அப்படியே திருவருள் நிலையும் சிவ அருள் நிலையும் ஒரு பொருளாகவே ஒரு கடவுளாகவே உள்ளன.

> "தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
> பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
> சூலமும் தொக்க வளையும்உடைத் தொன்மைக்
> கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"

எனத் திருவாசகமும்,

> "தாழ்சடையும் நீண்முடியும் சக்கரமும் ஒண்மழுவும்
> சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் — சூழும்
> திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
> இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து"

என்று திருநாலாயிரமும் இவ்வுண்மையினை விளக்கி உரைத்தன. எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் மாதொருபாகனாய் (அர்த்தநாரீசுரராய்) அம்மையப்பராய் விளங்கும் இவ்வழகை எல்லா உயிர்ப் பொருள்களிலும் நேரிற் காண்கின்றோம்.

> சத்தியும் சிவமு மாய தன்மைஇவ் வுலக மெல்லாம்
> ஒத்துஒவ்வா ஆணும் பெண்ணும் உயர்குண குணியு மாகி
> வைத்தனன் அவளால் வந்த ஆக்கம்இவ் வாழ்க்கை யெல்லாம்
> இத்தையும் அறியார் பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார்.

என்னும் சிவஞானசித்தியாரிலும் இவ்வுண்மையைக் காண லாம்.

உயிர்ப் பொருள்களில் ஆணும் பெண்ணுமாகவும் உயிரற்ற அறியாமைப் பொருள்களில் குணமும் குணியுமாகவும் இவ் வாண்பெண இயல்புகள் விளங்குதலைச் சித்தியார்ப் பாடல் நன்கெடுத்துக் காட்டுகின்றது. இவ் வியல்புகள் இரண்டும் தமக்குள் ஒத்தும் ஒவ்வாமலும், தொடர் வண்டியின் இரு தண்ட வாளங்களைப்போல விளங்குகின்றன. இரு தண்டவாளங் களும் இரு பிரிவுகளாய்த் தம்முள் ஒவ்வாதனபோலப் பிரிந்து சென்றுகொண்டிருந்தாலும், தமக்குள் அவை ஒத்து இணக்கங் கொண்டிருப்பதை அறியாதார் யார்? தமக்குமேல் உலகமாகிய தொடர்வண்டி இயங்கிக்கொண்டிருப்பதையும் உணராதார் யார்?

எல்லாம் வல்ல ஒரு முழுமுதற் கடவுள், அம்மையாய் உலகத் தொண்டுகளுக்கும், அப்பனாய் உண்மைத் தொண்டு களுக்கும் பணி புரிந்து வரும் அழகை, உதவியை, உயிர்கள் மறக்க முடியுமா? உருகுவதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்?

'உள்ளொளி பெருக்குதல்' அம்மையின் திறமாதலோடு, தன்னலங் கழன்ற பொதுமையையும் அதனில் அது நிழலாட விடுகிறது. அப்பன் திருவருள் புதுமை புதுமையாய் 'உலப்பிலா ஆனந்தத் தேன் சொரிந்து' உயிர்களை உய்விக்கின்றது புணருந் தோறும் பெரும்போகம் இதனால் உண்டாகின்றது. முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளாய் விளங்கும் இறை நிலை, பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியதாய்த் தேன் பிலிற்றிக்கொண்டிருக்கின்றது.

1600 ஆண்டுகளுக்கு முன் சிவனடிப் பேரன்பில் ஈடுபட்ட மாணிக்கவாசகரும், அவருக்கு முன்னும் பின்னும் உருகி அடியடைந்த பேரடியார்களின் ஆருயிர்களும் இன்னும் இன்புற்ற படியாய்ப் புதுமை புதுமையாய்ப் பேரின்பம் துய்த்து வருகின்றன; நாழி கொண்டு ஆழியை அளந்துவிட முடியுமா?

உரையாசிரியர் மெய்க் கருத்தறியாமல் சிலர் கடவுளின் அருளே அம்மையென்று கூறுவதுண்டு; 'அம்மைக்கும் அருளுண்டு, அப்பனுக்கும் அருளுண்டு' என்று சேக்கிழாரடிகள் தனித்தனியே எடுத்துக் காட்டி இணக்குகின்றார். சீகாழித் தெருவில் திருஞானசம்பந்தரும் அப்பரும் இருவராய் இணைந்து செல்வதை அப் பெருமான்'

"இருட்கடு உண்டவர் அருளும்
ஈன்றுள்தன் திருவருளும் போல"

என்று அருளிச் செய்வார்.

இங்கே ஆசிரியர் மறைமலையடிகளார் திருவருட் பயிற்சியாகிய பொதுமையை நிறைவாகப் பெற்றுத் திருவருட் சான்றோராய் விளங்கினர் என்பதற்கு அவர்களுடைய 'பொது நிலைக் கழக' அமைப்பே தக்க சான்றாகும்.

தம்மை மறந்த நிலையில் தம் அன்பையும் அருளையும், எல்லாம் வல்ல திருவருட் செயலில் இரண்டறக் கலக்கிக் கொள்வது அவர்கள் பயிற்சிகளில் ஒருவகை. திருவருட் செல்வத்தைத் தவிர மற்றைச் செல்வங்களை அடிகள் ஒரு பொருளாக எண்ணாதவர்; எவ்வளவு பெரிய உயிர்களையும் தெய்வமாகப் பேணாதவர்;

"சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்

நாளும் பயின்று வருபவர்.

## ரு. சிவ விளக்கம் (சிவநிலையில் நாகரிகம்)

இதனை 'உண்மைத் திரு' என்றும் (புதுமைத் திறன்) சொல்லிவிடலாம்; உயிரின் சிறப்புக் கருதி, உரிய காலத்தில், திருவருட் செல்வி, உயிரைச் சிவத்துடன் சேர்த்துப் புதுமை இன்பத்தை நுகரும்படி செய்யும்; புதுமையைப் பெறுவதற்காகவே பொதுமை அறம் கையாளப்பெற்றது. பொதுமை உண்டாகாமல் புதுமையும் உண்டாகாது.

"நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்னும் திருமந்திரத்தில் பொதுமைச் சிறப்பும் அதனால் புதுமை இன்பமும் நிழலாடுதல் காணப்படும்.

ஆசிரியரடிகளார் தம் வாழ்நாள் முழுமையும் உண்மைத் திறத்திலேயே, அஃதாவது புதிய புதிய கொள்கையிலேயே ஒழுகியவர்கள்; அவர்கள் கருத்துக்களெல்லாம் நாட்டுக்குப் புதுமையுண்மைகளை எப்போதும் விசிறிக்கொண்டிருந்தன. அறியாதார் சிலரிடமிருந்து எதிர்ப்புக்களும் மறுப்புக்களும் தோன்றியபடியிருக்கும். மன்பதை நலங் கருதி அடிகளாரும் உண்மைகளையும் புதுமைகளையும் மேன்மேலும் தெளிவித்து விளக்கங்கள் கொடுத்துக்கொண்டிருப்பார்கள். உயிர் உணர்வில் சிவம் நிறைகிறது என்பதற்கு இஃது அடையாளம்! அடிகளார் வகையில் சிவம் தன்னிலையிலும் நிறைவுபெற்றிருந்தது.

உயிர்கள் எக்காரியம் செய்தாலும் ஆண்டவனுக்கு அது திருவுள்ளமா? என்பதனை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். திருஞான சம்பந்தர் சமணர்களோடு வாதிடுவதற்குமுன் அதற்கு ஆண்டவன் திருவுள்ளம் உண்டா என்று அறிந்துகொள்ள விரும்பினர். ஆலவாய்த் திருக்கோயிலுக்குச் சென்று ஆண்டவனை வேண்டினர்.

"வாது செய்யத் திருவுள்ளமே"

என்று கேட்டு இறைவன் கட்டளையேற்று அதற்கு மேலேதான் அரண்மனை சென்று சமணரோடு வாதிட்டார். வெற்றியும் பெற்றார். ஏடு எதிரேறியபோது, 'தமிழால் ஏடு எதிரேறிய'தென்று அருணகிரிநாதர் அதனை விதந்து மகிழ்ந்தார். தமிழ்ச் சுவை இன்னதென்பதற்கு இது சான்று!

சமயகுரவரிற் பலரும் அத்தகையவரே. தனித் தமிழ் இயக்கத்துக்கு ஆண்டவன் திருவுள்ளத்தை அடிகள் பெற்றுக்கொண்டார். இதனைப் பலர் அறியார்.

ஒரு நேரம் தஞ்சாவூரில் மாபெரும் புலவர் விழாவில் இத் தனித்தமிழ் இயக்கம் விறுற்றது. இறைவன் திருவுள்ளத்தை அடிகளார் அறிந்து துணிந்து செயலாற்றினர்.

இறைவன் நம்பிக்கைக்கு அடிகளார் வரலாற்றில் பல நிகழ்ச்சிகள் உண்டு; ஒன்றை இங்கே குறிப்பிடலாம்.

வடநாட்டுப் பயணத்தில் 'சிகந்தராபாத்து' அருகில் மாலை வேளையில் தொடர்வண்டியிலிருந்து, அடிகளார், குறிப்பிட்ட முகவரிக்குச் செல்ல வண்டி அமர்த்திக்கொண்டார்! வண்டிக்காரன் மலைக் கணவாய்களின் வழியே மிகு விரைவாக வண்டியை ஓட்டிச் சென்று ஒரு தனி இடத்தில் கத்தியை உருவிக் காட்டி அச்சுறுத்தி அடிகள் அணிந்திருந்த பொற்சங்கிலி பின்னிய ஒரே ஒரு சிவமணியைத் தனக்குக் கொடுத்துவிடும்படி கேட்டான். அடிகளார் சற்றும் அஞ்சவில்லை. மாலை எட்டு மணியிருக்கும். 'சிவமணி இறைவன் அடையாளம்; அதனைத் தர இயலாது; இறைவன் இருக்கிறன்; நீ குத்து பார்க்கலாம்" என்று நெஞ்சு நிமிர்ந்து கூறினர். வண்டிக்காரனுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. அடிகள் திருவடியைத் தொட்டு வணங்கிக்கொண்டு 'அடியேன் அறியாமற் செய்த பிழையை மன்னித்தருளவேண்டும்' என்று வேண்டிக்கொண்டு, உரிய இடத்திற் சேர்த்துவிட்டு, வண்டிக் கூலியும் வாங்காமல் திரும்பிப் போக முற்பட்டான்; அடிகளார் அவனை அழைத்து 'நீ பெருந்தன்மை மிக்கவன்; உனக்கு இரு மடங்காகக் கூலி கொடுக்கிறேன்; நீ கட்டாயம் பெற்றுக்கொள்ளத்தான் வேண்டும்' என்று பரிந்தளித்து நீடு வாழ்த்தி அனுப்பி வைத்தார்.

இங்ஙனமெல்லாம் ஆசிரியர் மறைமலையடிகளார் உடல், மனம், உயிர், அருள், சிவம் என்னும் எல்லாப் பிரிவுகளிலும் விளக்கம் நிறைந்தவராய், நாகரிகச் சான்றோராய், நாளுந் திகழ்ந்து சுடர் வீசி விளங்கினர்.

———

# சங்கநூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(சென்ற இதழ் அஅஆம் பக்கத் தொடர்ச்சி)

## 4. கயல்

சங்க நூல்களில் கயல் என்ற மீனைக் குறித்துள்ள செய்திகள் சில பாடல்களில் கூறப்பட்டுள்ளன. கயல் மீன்களில் வெண் கயல், செங்கயல், கருங்கயல் என்ற மூன்று வகைகள் தமிழிலக் கியங்களில் கூறப்பட்டுள்ளன. செங்கயல், கருங்கயல்பற்றிச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கூறுகின்றன. கயல்மீனை மை உண்ட கண்களோடு ஒப்பிட்டுக் கூறுவதையே பல சங்கப் பாடல்களில் காண்கிறோம்.

''கயலேர் உண்கட் குறுமகட்கு'' —நற்றிணை, 220

''... ... ... ... நெடுநீர்ப்
பொருகயன் முரணிய வுண்கண்'' —குறுந்தொகை, 250

''கயலென வமர்த்த வுண்கட் புயலென'' —அகம், 126

''குளித்துப்பொரு கயலிற் கண்பனி மல்க'' —அகம், 313

''மதர்கயன் மலைப்பி னன்ன கண்ணெமக்கு'' —அகம், 318

''உறழ்வே லன்ன வொண்கயன் முகக்கும்'' —புறம், 249

''கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்
வெள்ளி வெண்டோ டன்ன கயல்குறித்துக்'' —அகம், 346

இரண்டு கயல்மீன்கள் எதிரெதிரே பொருதுவதுபோல் மையுண்ட இரு கண்கள் தோன்றியனவாகக் குறுந்தொகை கூறியுள்ளது. மதர்த்த கயல்மீன்கள் போரிடுவதுபோல கண்கள் இருந்தனவாக அகநானூறு கூறியுள்ளது. நீருள்ளிருந்து போரிடும் இரு கயல்கள்போல் கண்ணீர் சிந்தும் கண்கள் இருந்தனவாகவும் கூறப்பட்டுள்ளது. கயல்மீன்கள் போல மாதரின் மையுண்ட கண்கள் இருந்தனவாகக் கூறிய உவமை மிகவும் சிறப்பான, அழகிய உவமையாகும். கயல்மீனைக் கண்டவருக்கு இந்த உவமையின் நுண்ணிய நயம் புலப்படும். வேல்போன்று ஒண்கயல் இருந்ததாகப் புறநானூறு கூறி யுள்ளது. பளபளப்பான, வெண்மையான கயல்மீனை வேலிற்கு ஒப்பிட்டுக் கூறியது பொருத்தமே. வடிவிலும் ஒப்புமை உள்ளது. அகநானூறு 346 ஆம் பாட்டு ''வெள்ளி வெண் தோடு'' என்று கயல்மீனைக் குறித்துள்ளதால் சங்கநூல்களில் கூறப்பட்ட கயல்மீன் வெண்மையானது, ஒண்மையானது என்று தெரிகின்றது. இந்த வெள்ளைக் கயல் மீன்களைப்போல்

மாதரின் மையுண்ட வெள்ளைக் கண்கள் இருந்தனவாகக் கூறப் பட்டுள்ள உவமையைக் கவனிக்க வேண்டும். கயல்மீனை இக் காலத்தில் வெண்கெண்டை என்று சில பகுதிகளில் அழைக் கின்றனர். இந்த மீன் வெள்ளியைப்போல இருக்கும். ஆனால் மீனைச் சுற்றியுள்ள துடுப்பாலாகிய விளிம்பு கருமை பூசப்பட்டது போல இருக்கும். (Labeo Fimbriatus is silvery along the back, becoming lighter on the sides and beneath. Fins more especially the ventral, anal and lower caudal lobes stained with black.) உடல் வெண்மையாகவும் விளிம்பு கருமையாகவும் இருப்பதால் மையுண்ட வெள்ளிய கண்களுக்கு ஒப்பிடப்பட்டது மிக அழகான, நுட்பமான உவமையாகும். இந்த மீனின் அடிப்பக்க விளிம்புதான் நன்கு கருமையாகத் தெரியும் என்று இந்திய மீன்களை ஆராய்ச்சி செய்த பேரறிஞர் டாக்டர் டே அவர்கள் கூறியுள்ளார். மை உண்கண் என்று உவமித்ததி லிருந்து கயல்மீன் Labeo Fimbriatus (Cyprinus fimbriatus) என்று தெளிவாகத் தெரிகின்றது.

சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும், பிற்கால நூல் களிலும் செங்கயல், கருங்கயல் என்ற பெயர்கள் பயில்கின்றன. பெரும்பாணாற்றுப்படை 'செவ்வரிக் கயலை'ப் பற்றிக் கூறி யுள்ளது.

> "புலவுநுனைப் பகழியுஞ் சிலையு மானச்
> செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழு
> மையிருங் குட்டத்து மகவொடு வழங்கிக்"
>
> —பெரும்பாணாற்றுப்படை, 269-271

> "அஞ்செங் கழுநீ ரரும்பவிழ்த் தன்ன
> செங்கய னெடுங்கட் செழுங்கடைப் பூசலும்"
>
> —சிலம்பு 2 : 14 : 140-141

> "செங்கயல் பாய்ந்து பிறழ்வன கண்டாங்
> கெறிந்தறு பெறுஅ திரையிழுந்து வருந்தி
> மறிந்து நீங்கு மணிச்சிரல் காணெனப்"
>
> —மணிமேகலை 4 : 22-24

> "செங்கய னெடுங்கண் செவிமருங் கோடி."
>
> —மணிமேகலை 4 : 101

> "அஞ்சனஞ் சேரச் செங்கய னெடுங்கணும்"
>
> —மணிமேகலை 18 : 161

கொள்ளிடத்திலும் காவிரியிலும் கிடைக்கும் ஒருவகைக் கயல் மீனுக்கு உடலில் சிவப்புச் சாயம் பூசப்பட்டதுபோலக் காணப்

படும். சிவப்பு வரிகளுடன் (a general reddish or fleshy tinge. Each scale may have a red centre.) காணப்படும். இந்தக் கயல்மீனைக் குறுமுழி கெண்டை என்று தற்காலததில் அழைக்கின்றனர். இந்தக் கயல்மீனையே செவ்வரிக்கயல் என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. சிந்தாமணியிலும் 'செங்கேழ்க் கருங்கயல்' (626) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. செங்கழுநீரின் நீர்க்கீழரும்பை நெகிழ்ந்து பார்த்தாலொத்த சிவந்த கயல்போல நெடிய கண்ணின் செழித்த கடையாற் செய்த பூசல் என்று சிலப்பதிகாரம் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். இந்தச் செங்கயலும் ஓரத்தில் கருஞ்சிவப்புடன் காணப்படுவதாகக் கூறுவர். செங்கயலை Labeo Kontius (Cyprinus rubro-Punctatus) என்று அறிவியலில் அழைப்பர்.

சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் கருங்கயல் என்ற கயல்மீன் வகையைக் கூறியிருப்பதைக் காணலாம். வெண்கயல் சங்கநூல்களில் கூறப்பட்டுள்ளது. செவ்வரிக்கயல் பெரும்பாணாற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது. இதுவே சிலம்பிலும் மணிமேகலையிலும் செங்கயல் என்று அழைக்கப்பட்டுள்ளது. அடுத்துக் கருங்கயல் சிலம்பிலும மணிமேகலையிலும் கூறப்பட்டுள்ளது. இந்தக் கருங்கயல் எதுவென்று அறிய வேண்டும். இளங்கோவடிகள் கருங்கயல் காவிரி ஆற்றில் இருந்ததாகக் கூறியுள்ளார்.

''அருவி முல்லை யணிநகை யாட்டி
விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கய னெடுங்கண்''
—சிலம்பு 13 : 165-166

''இருகருங் கயலோ டிடைக்குமி ழெழுதி'' —சிலம்பு 5 : 205

''கருங்கய னெடுங்கட் காதலி தன்னொடு'' —சிலம்பு 6 : 3

''மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி''
—சிலம்பு 1 : 7 : 26-27

''மாயிதழ்க் குவளை மலர்புறத் தோட்டிக்
காய்வேல் வென்ற கருங்கய னெடுங்கண்''
—மணிமேகலை 18 : 74-75

கருங்கயல் என்று சிலம்பிலும் மணிமேகலையிலும் கூறப்பட்ட கயல்மீன் ''கரிமீன்'' என்று கன்னடத்தில் அழைக்கப்படுகின்றது. இந்த மீனின் உடல் கரியநிறமுடையது. இதனுடைய துடுப்புகளும் ஓரமும் கருநிற முடையவை. ''கரிந்த நீண் கயல்'' என்று திருவிளையாடற்புராணம் கூறு

கின்றது. தெளிந்த நீரில் வாழும் சில கருங்கயல்களில் சிவப்பு வரிகளும் காணப்படுவதுண்டு. (Labeo Calbasu - blackish sometimes in examples from clear streams many of the scales bear a black centre.) கருங்கயல்களையும் மாதர் கண்களுக்கு ஒப்பிட்டுக் கூறியிருப்பதைக் காணலாம். மாதரின் கண்களில் சினம் முதலிய காரணங்களால் செம்மை காணும்போது அந்தச் செம்மை செங்கயல்களின், கருங்கயல்களின் செம்மையொடு ஒத்திருப்பதைக் கண்டே தமிழ்ப் புலவர்கள் உவமித்திருப்பது நன்கு கவனிக்கத் தக்கதாகும். கம்பரும்,

*"உன்கண் கருங்கயல் செம்மை காட்ட"* (5-2-10)

என்று கூறியுள்ளதைக் காணலாம். கருங்கயலை (Labeo Calbasu Cirrhinus Calbasu) என்ற அறிவியலில் அழைப்பர். கன்னடத்தில் கரிமீனு என்றழைக்கின்றனர். தமிழில் காக்கா மீன் என்று இதன் கருநிறத்தைச் சுட்டி அழைக்கின்றனர். சங்க இலக்கியத்திலும் சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் சொல்லப்பட்ட ஒண்கயல், செங்கயல், கருங்கயல் ஆகிய மீன்கள் ஓரினத்தைச் சேர்ந்த வெவ்வேறு வகை மீன்கள் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

கயல்மீன் சுவையுடையதாயினும் நிறைய முள் உடையது.

*"கயன்முள் என்ன நரைமுதிர் திரைகவுட்"* —புறம். 195

*"கரிந்தநீன் கயன்முள்ளி னரையும்"*
—திருவிளையாடற்புராணம், விருத்த-20

கயல் முள்ளைப்போல முதிர்ந்த நரைமயிர் இருந்ததாகப் புறநானூறு கூறியுள்ளது பொருத்தமான உவமையாகும். கயல்மீன் தெளிந்த நீரையும் புது வெள்ள நீரையும் எதிர்த்துச் செல்லும் வழக்கமுடையது. நீர் வற்றும்போது சிறிதாகிய நீரை நோக்கியும் செல்லும் வழக்கமுடையதால் எளிதில் பிடிப்பர்.

*"கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்ப்*
*பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை"*
—நெடுநல்வாடை 18-19

*"கூரற் கொக்கின் குறும்பறைச் சேவல்*
*வெள்ளி வெண்டோ டன்ன கயல்குறித்து*
*..................................*
*..................................*
*வருத்திக் கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை*
*மீதழி கடுநீர் நோக்கிப் பைப்பயப்*
*பார்வ லிருக்கும் பயங்கெ ழூர"* —அகம், 346

*"கயற்கணங் கலித்த பொய்கை யூர"* —நற்றிணை, 230

"சூழ்கழி மருங்கி னுணிரைக் கொளீஇச்
சினைக்கயன் மாய்க்குந் துறைவன் கேண்மை"
—ஐங்குறுநூறு, 111

"நிலையருங் குட்ட நோக்கி நெடிதிருந்து
புலவுக்கய லெடுத்த பொன்வாய் மணிச்சிரல்"
—சிறுபாணாற்றுப் படை 180-181

கயல், கெண்டை முதலிய மீன்கள் புதுநீர், மழைநீர் வரும் போது எதிர்த்துப் பாயும் தன்மையுடையவை. இதைச் சங்கப் பாடல்கள் கூறியுள்ளன. 'மீதழி சுடுநீர்' நோக்கிக் கொக்கு காத்திருந்ததற்குக் காரணம் நீர் குறையும்போது கயல் எதிர் வரும் என்பதாலாகும். "சின்னீர் மாக்கய லெதிர்ந்தவை போல" (2540) என்று சீவகசிந்தாமணி கூறியதைக் காண லாம். இதுபோலவே சேல்கெண்டை மீன்களும் சிறிதாகிய நீரை எதிர்த்துச் செல்லும் என்பதை "சேலேறு சின்னீரிடைச் செல்வன போன்று" (2544) என்று சிந்தாமணி கூறியுள்ளது. கொக்கும் மீன்கொத்தியும் கயல்மீனைப் பிடிப்பதைப் பற்றியும் சங்க நூல்கள் கூறியுள்ளன. இந கயல்மீன்கள் பாண்டியரின் அடையாளமாகச் சங்க காலத்திலிருந்து மிகப் பிற்காலம் வரை வழங்கியிருக்கின்றன. பாண்டியனுக்கு மீனவன் என்ற பெயரும் இதனுல் வந்தது. மலையாளத்தில் கயல் என்ற பெயர் இலக்கியத்தில் வழங்குகின்றது. பழைய திராவிட மொழிகளில் கைய்யே, கெய் என்று இப்பெயர் வருகின்றது.

5. கெண்டை

பிற்கால நூல்களில் கயலையும் கெண்டையையும் மயங்கி ஒன்ருகக் கூறினும் சங்க நூல்களில் கயலையும் கெண்டையையும் பிரித்தே கூறியுள்ளனர்.

"வண்டு கொப்பளித்த தீந்தேன்
வரிக்கயல் பருகி மாந்தக்
கெண்டைகொப் பளித்த தெண்ணீர்
கெடில வீரட்டனுரே."

அப்பர் பாடிய தேவார நான்காம் பதிகத்தில் வரிக்கயல் மீனையும் கெண்டை மீனையும் பிரித்தே கூறியுள்ளதைக் காணலாம். புற நானூற்றிலும் கலித்தொகையிலும் பிற்கால நூல்களிலும் பாண்டியரின் அடையாளமான கயல் மீனைப்போலக் கெண்டை மீனைக் கூறியிருப்பதைக் காணலாம்.

"அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்" —குறுந்தொகை, 91

"குருகுகொளக் குளித்த கெண்டை யயல
துருகெழு தாமரை வான்முகை வெரூஉம்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர" —குறுந்தொகை, 127

"நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே'' —புறம், 58

"கால மாரியி னம்பு தைப்பினும்
வயற் கெண்டையின் வேல்பிறழினும்'' —புறம், 287

"கெண்டை பாய்தர வவ்ழ்ந்த
வண்டுபிணி யாம்ப னுடுக்கு வோனே'' —ஐங்குறுநூறு, 40

"ஒள்ளொளி சேய்தா வொளிகிள ருண்கட்கெண்டை
பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினெறும்.''
—பரிபாடல் 16 ; 40-41

கெண்டைமீன் ஆழமான ஏரியில் பிரப்பங்கனியைக் கௌவுவதைக் குறுந்தொகை கூறியுள்ளது. வயலில் கெண்டை மீன் வேல்போன்று பிறழ்ந்ததாகப் புறநானூறு கூறியுள்ளது. 'குழைஉரு மிளிரும் கெண்டை' என்று கம்பர் வர்ணித்துள்ளார். இதன் வயிறு உருண்டு திரண்டு இருக்கும். ஆதலின் குழை உருவம் வாய்ந்ததாகக் கம்பர் கூறியிருக்கிறார். கெண்டை மீனைக் குருகு உண்ண விரும்பியதையும் குறுந்தொகை கூறியுள்ளது. தற்காலத்தில் பல இன மீன்களைக் கெண்டைமீன் என்று சொன்னாலும் சங்க நூலகளில் கூறிய கெண்டைமீன் வெண்கெண்டை என்று அழைக்கும் மீனாகவே இருக்கும். இந்த மீன் காவிரி முதலிய தமிழ்நாட்டு ஆறுகளிலும் குளங்களிலும் மிகுதியாகக் காணப்படுகின்றது. இதை Cirrhina Cirrhosa என்றழைப்பர். சேல்கெண்டை என்றொரு மீன் பிற்கால நூல் களில் கூறப்பட்டுள்ளது. திருமங்கையாழ்வாரும் "சேல்கள் பாய்தரு செழுநதி வயல்புகு திருவயிந்திர புரமே'' என்று பாடி யுள்ளார். சேலும் கயலும் என்று தேவாரத்தில் பிரிததே கூறப்பட்டுள்ளது. சேல்கெண்டையை Bardus dorsalis என்றழைப்பர். இந்த மீன் வெள்ளிபோல வெண்மையாக இருக்கும். கம்பர் 'சேல்போல் பிறழும் நெடுங்கண்' என்றும், 'சேலுண்ட ஒண்கணாரில்' என்றும் மகளிர் கண்ணிற்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். காவிரி முதலிய ஆறுகளில் காணப்படும். 'ஒளிகிளர் உண்கட் கெண்டை மதுபானம், புனலாட்டு புலவி யென்னும் இம் மூன்றினாலும் ஒள்ளிய நிறம் சிவக்க' என்று பரிமேலழகர் பரிபாடலில் உரை கூறியிருப்பதைக் காணலாம். கெண்டைமீனிற்கு வெள்ளிய நிறத்துடன் செதில்கள் இருக்கும். ஒவ்வொரு செதில நடுவிலும் செம்மை நிறம் இருக்கும். (Cirrhina Cirrhosa-silvery, every scale having a red centre except along the abdomen). இதன் காரணமாகவே கெண்டையை மதுவுண்டு சிவந்த மகளிர் கண்ணிற்கு ஒப்பிட்டனர். பிற்கால நூல்கள் கெண்டையை மகளிர் கண்ணிற்கு ஒப்பிட்டுக் கூறுவது வழக்கமாகும்.

———

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[கீ. இராமலிங்கனர், எம். ஏ.

உறுப்பினர், ஆட்சிமொழிக்குழு, தமிழக அரசு]

Doctor:

இச்சொல்லுக்கு 'Docere' என்னும் இலத்தீன் சொல்லே மூலம். இம்மூலச் சொல்லின் பொருள் 'To teach' என்பதாகும். எனவே, 'Doctor' என்னும் சொல், 'Teacher'—ஆசிரியர் என்னும் பொருளில் இருக்கிறது.

ஆசிரியர் என்பவர் அறியாமையைப் போக்குபவர். (ஆசு-குற்றம். குற்றத்தில் குற்றமாவது அறியாமையாகிய குற்றம். இரியர்—விலக்குபவர், கெடுப்பவர், ஓட்டுபவர்) அறியாமையை ஓட்டுவதற்கு, அறிவு இன்றியமையாதது. எனவே, ஆசிரியர் அறிஞர் ஆகிருர்.

படிப்பின், ஒரு துறையைப்பற்றிய அறிவினது, மெய்யான தன்மையை அதன் 'மெய்யியல்' என்போம். (மெய் - உண்மையான, இயல் - தன்மை) 'தமிழின் மெய்யியல்' என்பது அம்மொழியைக் குறித்த அடிப்படையான அறிவு, சிறந்த அறிவு, முழு அறிவு பெற்ற தன்மை ஆகும். மெய்யியலை, ஆங்கிலத்தில் 'Philosophy' என்கிரும்.

அப்படியே, ஒவ்வொரு படிப்பின் மெய்யியலும், அந்த அந்தப் படிப்பின், அடிப்படையானதும் சிறந்ததும் முழுதுமான அறிவை அடைந்த தன்மையாகும். ஒரு படிப்பில் மெய்யியல் அறிவு பூண்ட ஒருவருக்குப் பல்கலைக் கழகம் 'Ph. D.' என்னும் பட்டம் வழங்குகிறது. பல்கலைக் கழகம் வழங்கும் மிக உயர்ந்த பட்டம் இதுவே.

'Ph. D.' என்பதில் 'Ph.' என்பது 'Philosophy' யையும் 'D.' என்பது 'Doctor' ஐயும் குறிக்கும். Ph. D. ஐ விரித்துச் சொன்னல் 'Doctor of Philosophy' என்று ஆகும். இதனைத் தமிழில் 'மெய்யியல் அறிஞர்' என்று கூறலாம். இந்த அறிவு, மேற்போக்கான வெறும் சிறு அறிவு அன்று, இது மெய்யியல் அறிவு. எனவே, இவ் அறிவைப் பூண்டவரை வெறும் 'அறிஞர்' என்னுமல் 'முதறிஞர்' என்பது பொருத்தமாகும். 'முதறிஞர்'

என்னும் பொருளேயே 'பேரறிஞர்' என்னும் சொல்லும் தருகின்ற தாயினும் 'மூதறிஞர்' ஓசை நயமுடையதாகின்றது.

'Ph. D.' யைத் தமிழில், 'மெய் மூ' என்னும் எழுத்துகளால் குறிக்கலாம். 'Ph. D.' பட்டம் பெயருக்குப் பின்னுல் எழுதப் பெறுவது. இப்பட்டம் பெற்றவரை 'Doctor' என்று அழைப்பது மரபு. இந்த 'Doctor' பட்டம் பெயருக்கு முன்னுல் இடப் பெறுவது. 'Doctor' என்பதைச் சுருக்கி 'Dr.' என்று பெயரின் தலைப்பில் வரைகிருேம். 'Doctor' என்னும் சொல்லைத் தமிழில், 'மூதறிஞர்' என்று சொல்லலாம். இதனைச் சுருக்கி 'மூர்' என்று, பெயரின் முகப்பில், குறிக்கலாம். அங்ஙனம் எழுதினுலும் 'அழைப்பது 'மூதறிஞர்' எனறே. (Dr. M. Varadarajanar, Ph. D.-மூர். மு. வரதராசனுர், மெய். மூ) 'D. Litt' (Doctor of Literature) என்னும் பல்கலைக் கழகப் பட்டம் Ph. D. பட்டத்தைப் போலப் பல்கலைக் கழகத்தின் மிக உயர்ந்த பட்டமாகும். தமிழில், அதனே, இலக்கிய மூதறிஞர்' எனலாம். ஒரு மொழியின் இலக்கியத்தின் மெய்யியலை யறிந்து மூதறிவு பெற்றவரே இலக்கிய மூதறிஞர் ஆவார். இப்பட்டம் பெற்றவரின் பெயருக்கு, முனனுல் 'Dr.' என்றும், பின்னுல் 'D. Litt.' என்றும் எழுதுவது மரபு 'Dr.' என்பதை 'மூர்' என்று எழுதலாம் என்று முன்பே அறிந்தோம். 'D. Litt.' என்பதை 'மூ. இல' என்று குறிக்கலாம். 'Dr. Kalaignar M. Karunanidhi D. Litt.' என்னும் தொடரை 'மூர் கலைஞர் மு. கருணுநிதி மு. இல'' என்று எழுதவேண்டும். சொல்லும்போது, மூதறிஞர் கலைஞர் மு. கருணுநிதி, மு. இல. என்போம். இவை நிற்க.

மருத்துவத்துறையிலும் 'Doctor' எனும் சொல் பெரு வழக்கினதாக, இருக்கின்றது. 'Doctor' பண்டுவம் செய்கிருர். 'பண்டுவம்' என்ருல் 'Treatment'. மருந்து தந்து பிணியை அகற்றுவதும், அறுவை செய்து நோயை நீக்குவதும், பண்டுவமே. பண்டுவம் செய்வதால் அவர் 'பண்டுவர்' எனப் பெறுவார். (Dr. பர்) 'மருந்தறிஞர்' 'அறுவையறிஞர்' இவற்றில் ஒரு பண்டுவருக்கு எது பொருந்துமோ, அதை அவர் பெயருக்கு முன்னுல் இட்டும், அழைக்கலாம். 'மருந்தர்' 'அறுவையர்' என்றும், அவற்றைச் சுருக்கிக் கூறலாம். 'Physician & Surgeon' மருந்தர், அறுவையர்., ஆனுல், மருத்துவத்துறையில், பல்கலைக் கழக 'மூதறிஞர்' பட்டம் பெருதவர்களை 'மூதறிஞர்' என்பது சரியாகாது. இதற்குரிய காரணத்தைக் கீழே காணலாம்.

M. B., B. S. பட்டத்தில் 'M' Medicine, 'B'—Bachelor, 'S' Surgery இப் பட்டத்தை விரித்து எழுதினுல் 'Medicine

Bachelor, Bachelor Surgery அஃதாவது Bachelor of Medicine and Bachelor of Surgery என்ருகும். இதைச் சுருக்கினுல் 'B. M. & B. S'. என்று ஆகிறது. ஆனுல், ஓசை நயத்திற்காக 'Bachelor' என்னும் சொல்லே இரண்டு முறை, நடுவில் இட்டு 'M. B., B. S.' என்று அமைத்திருக்கிருர்கள். இப் பட்டத்தில் 'Doctor' என்ற சொல்லே இல்லே. 'Bachelor' தான் இருக்கிறது. கவனிக்க.

'இந்த 'Bachelor' (இளேஞர்) பட்டத்திற்கு, நேர்மேல் பட்டப் படிப்புக்குத் தனித்தனியே 'M. D.' 'M. S.' என்று இரண்டு பட்டங்களே வழங்குகிருர்கள். M. S.—Master of Surgery. இது கலேப்படிப்பில் 'B. A.' வுக்கு மேலுள்ள பட்டப் படிப்புக்கு M. A. பட்டம் வழங்குவது போன்றது. M. D. என்பதும் M. B. க்கு மேல்பட்டப் படிப்புக்கு வழங்கும் பட்டமே. ஆனுல், இதனே M. M. (Master of Medicine) என்று குறிக்காமல் M. D. (Doctor of Medicine) என்று ஏன் குறித்தார்களோ என்பது விளங்கவில்லே. அறுவைக்கு 'M. S.' பட்டத்தைப் போல மருந்துக்த 'M.D.' ஐ 'M. M.' என்றே கொள்ளவேண்டும் என்று தோன்றுகிறது. 'M. D.' 'M. S.' இரண்டும், முதல் மேல் பட்டங்களே, 'Ph. D.' ஐப்போன்று, இரண்டாம் மேல் பட்டங்கள் அல்ல. எனவே, 'M. D.' 'M. S.' பட்டம்பெற்ற மருந்தர், அறுவையர்களேயும் 'Doctor' என்று அழைத்தாலும், 'மூதறிஞர்' என்ற பொருளே இந்த 'Doctor' என்னும் சொல்லுக்குச் சொல்லுவதற்கில்லே 'பண்டுவர்' என்னும் சொல்லே பொருந்துவது.

M. B. B. S.—ம. இ. இ. அ. (மருத்துவ இளேஞர், இளேஞர் அறுவை)

M. D.—ம. மு. (மருத்துவ முதுஞர்) M. S. அ. மு. (அறுவை முதுஞர்)

Dr. Arul, M. B. B. S.—பர், அருள் ம. இ. இ. அ. Dr. Ezhil M.D., பர், எழில், ம. மு.

**B. A., க. இ (கலே இளேஞர்) M. A. க. மு. (கலே முதுஞர்)**

**B. Sc. அறி. இ (அறிவியல் இளேஞர்) M. Sc. அறி. மு. (அறிவியல் முதுஞர்)**

———

# திருக்குறளில் கணித நுட்பம்

[திரு. இரா. மதிவாணன், எம்.ஏ., பி.எட்,]

மொழியின் சொல்வளத்தால் விளக்க முயலும் உயர் பண்புகளின் நுட்பச்சிறப்பைக் கணிதக் குறியீடுகளின் வாயிலாக மேலும் நன்கு விளக்க முடியும். செய்யாமல் செய்த உதவிக்குத் திருவள்ளுவர் காட்டிய உவமை ஒரு கணித நுட்பத்தை உள்ளடக்கியுள்ளது என்பது அறிந்து மகிழ்தற்குரியது.

கணிதம் நுட்ப மிக்க கலை. மாந்தரின் நுண்ணிய எண்ணங்களை வெளியிடும் மொழியும் நுட்பமான கலை. எனினும் கணிதம் முற்றிலும் உண்மையின் வடிவம். மாந்தரின் எண்ணங்கள் மொழியாக வெளிப்படுங்கால் பொய்மையும் கலந்து விடுவதால் திருவள்ளுவர்,

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப"......

என்று எண்ணுக்கு முதலிடமும் எழுத்தின் வடிவம் பெறும் மொழிக்கு இரண்டாவது இடமும் தந்தார். ஆனால், இவ்விரண்டையும் சமமாக இரு கண்களுக்கு ஒப்பிட்டுக் 'கண்ணென்ப வாழும் உயிர்க்கு' என்று கூறுவதை நோக்குங்கால் மொழியப் படும் சொற்களில் பொய்மை கலவாமல் செம்பொருள் கண்டார் வாய்ச் சொற்களாக (கணிதத்திற்கு ஈடாக) மொழியும் பெருமைப்பட வேண்டும் என்பது வள்ளுவர் கருத்தாகலாம் என்று தெரிகிறது.

கணிதம் அணுவினும் சிறிய பொருளையும் அளவிட்டுக் காட்டும். உதிர்ந்த தங்கத் துகளுக்கும் விலையிட்டுக் கூறும். இதைப்போலவே திருவள்ளுவர் சான்றோரால் மதிக்கத்தக்க உயர் பண்புகளின் உயர்ச்சியை வரை கோடிட்டு அளவிடுகிறார். பனையின் தலைப்பிரியாப் பழங்குடியின் பண்பாட்டை நுட்பமாக எடையிட்டுக் காட்டுகிறார்.

செய்ந்நன்றியறிதல் என்பது ஓர் உயரிய பண்பு. நன்றியில் மிகவும் உயர்ந்தது எது? விலையிலாதது அளவிட முடியாதது எது என்று ஆராய்கிறார். 'பயன் தூக்கார் செய்த உதவி', 'காலத்தினால் செய்த நன்றி' இவ்விரண்டையும் ஒப்பிடுகிறார். முன்னது கடலைவிடப் பெரியது. பின்னது இந்த உலகத்தை விடப் பெரியது எனக் கண்டறிகிறார்.

இவை இரண்டையும் விடப் பெரிய நன்றியை,

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது"

என்னும் குறளில் குறிப்பிடுகிருர்.

திருவள்ளுவர் நன்றியின் அளவைக் கணிக்கும் முறை

| நன்றி | ஒப்பிடும் எடைக்கல் | எடைக்கு மிக்கிருத்தல் | எடைக்கல் போதாமை |
|---|---|---|---|
| 1. பயன் தூக்கார் செய்த உதவி | நன்மைக் கடல் | பெரிது | — |
| 2. காலத்தினுற் செய்த நன்றி | ஞாலம் | மாணப்பெரிது | — |
| 3. செய்யாமல் செய்த உதவி | வையகமும் வானகமும் | — | பொருள்வைத்த தட்டைச் சிறிதும் மேலுயர்த்த ஆற்ருத அளவுக்கு எடைக் கல்லின் எடை குறைந்திருந்தல் எடைக் கல்லாக இருக்கத் தகுதி யின்மை. (ஆற்றல் அரிது) |

வையகமும் வானகமும் உள்ளிட்ட அளப்பரிய பெரு வெளியையே (the whole universe) எடைக்கல்லாக இட்டாலும் ஈடாகாது என்பதால் எடையிடும் முயற்சியை விட்டுவிட்டாரா என்று கருதத் தோன்றும்.

யாராவது கணக்குப் போடத் தொடங்கியபின் தக்க எடைக்கல் இன்மையால் முயற்சியை விட்டுவிடுவார்களா? திருவள்ளுவரா விடுவார்? எதுவுமே ஈடாகாது என்ருல் அதன் மதிப்பு அளவிடமுடியாதது என்று தானே பொருள். அளவிட முடியாத எண்ணமுடியாத நிலையும் ஓர் எண்ணிக்கை தானே. எனவே நுண்ணிய பண்பு நல ஏற்றத்தை நுண்ணிய கணித உண்மைகளின் உதவியால் நிறுவுகிருர். காலத்தினுல் செய்த உதவிக்கு மீண்டும் காலத்தினுல் எதிர் உதவி செய்தலும், பயன் தூக்காமல் செய்த உதவிக்கு மீண்டும் பயன் தூக்காமல் எதிர் உதவி செய்தலும் கூடும். ஆனுல், முதன் முதல் உதவி செய்வதில் முந்திக்கொண்ட, செய்யாமல் செய்த உதவிக்கு நாம் மீண்டும் உதவி செய்து அவரை முந்த முடியாதல்லவா? நாம் என்ன உதவி செய்தாலும் அஃது உதவிக்கு உதவியே.

செய்யாமல் செய்த உதவியாகாது. உதவிகளில் யாராலும் விலையிட முடியாதது செய்யாமல் செய்த உதவி. இதனை, $\frac{1}{0} = \propto$ (ஈறிலி) என்னும் கணிதக் குறியீட்டால் நன்கு விளக்கலாம்.

கணிதத்தில் '0' என்னும் எண்ணை '1' ஆல் வகுத்தால் கிடைப்பது $\frac{0}{1} = 0$ ஆனால், 1 என்னும் எண்ணை '0' ஆல் வகுத்தால் கிடைப்பது $\frac{1}{0} = \propto$ (ஈறிலி-infinite)

```
0) 1 (11111...
   0
   —
   1
   0
   —
   ⋮
```

இதனை மேலும் சிறிது விளக்குவோம். ஒருவன் பையில் ஒரு காசும் இல்லை. அவனை நோக்கி இங்குள்ளவர் அனைவர்க்கும் ஆளுக்கு ஒரு காசு கொடு என்றால் அவனால் ஒன்றும் தர இயலாது. $\frac{0}{1} = 0$ (பையில் ஒன்று மில்லாதபோது பங்கிட முடியாது).

ஒருவன் பையில் ஒரு காசு உள்ளது அவனை நோக்கி ஆளுக்கு '0' வீதம் எத்தனை பேருக்குக் கொடுப்பாய் என்று கேட்டால் அவன் எண்ணற்ற பேருக்குத் தருவேன் என்பான். பையில் பணம் இருப்பதால் அதைப் பங்கிட முடியும். ஆனால் பங்கிட்டுத் தரச் சொல்வதோ '0' ('0' தருதல் என்பது மூடிய வெறுங்கையை ஒவ்வொருவருக்கும் திறந்து காட்டுவது போன்றது.) இப்படி '0' வழங்குவதானால் எத்தனை கோடிப் பேர்க்கு வேண்டுமானாலும் வழங்கிக் கொண்டே போகலாம். முடிவே இல்லை. அவன் பையிலுள்ள ஒரு காசு குறையவே குறையாது.

தான் எவருக்கும் உதவி செய்யாமலிருந்த நிலை '0'. அப்படிச் செய்யாத நிலையில் பிறன் நமக்குச் செய்த உதவி '1' நாம் பெற்ற அந்த ஓர் உதவியை நாம் ஒன்றும் செய்யாத நிலையில் நின்று நோக்கினால் அஃது ஒப்பில்லாதது; விலையிட முடியாதது; அளவிட முடியாதது. அதனாற்றான் சான்றோர் தினையளவு உதவியையும் பனையளவாகப் போற்றுவதைத் தம் இயல்பாகக் கொண்டனர்.

எனவே செய்யாமல் செய்த உதவியின் பெருமையை அளவிட்டு நன்றாக எடைபிட்டுப்பார்க்க $\frac{1}{0} = \infty$ என்னும் கணித உண்மையை எடைக்கல்லாகக் கொண்டால் இக் குறட்பாவின் கருத்து மேலும் தெளிவாகிறது.

திருவள்ளுவர் காலத்தில் இக்கணிதக் குறியீடு இல்லாம லிருந்திருக்கலாம். ஆனால், இக் கணித நுட்பம் திருவள்ளுவப் பெருமானுக்கு அக்காலத்திலேயே தெரிந்திருந்தது என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர். அதனாலன்றோ 'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்' என்று ஔவைப் பெருமாட்டி புகழ்மாலை சூட்டினர்.

இவ்வாறே இலக்கியங்கள் ஏத்தும் உயர்பண்புகளின் கொடுமுடிகளை நுட்பமாக வரைகோடிட்டு அளவிடக் கணிதக் கோட்பாடுகள், குறியீடுகள், முடிவுகள் ஆகியவை எந்த அளவுக்கு ஏற்ற கருவிகளாகும் என்பதை அறிஞர் திருவுவாராக.

---

அன்பும் அருளும் நிலைபெற

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்னும் நம் தவ ஆசிரியர் திருமூலரின் மெய்யுரையினைக் கைக்கொண்டு, ஒரே முழுமுதற் கடவுளை, அன்பினால் அகங்கரைந்து உருகி வணங்கும் வணக்கமும், அதனால் உயிர்களெல்லாம் அவன் அருமைமக்களே ஆவர் என்னும் உணர்ச்சியுங்கிளர்ந்து விளங்கினாலன்றி அன்பும் அருளும் இந்நிலவுலகில் நிலைபெற மாட்டா அன்றோ?

—மறைமலையடிகள்

# 'தமிழ் கண்ட தண்பொருநை'

[வித்துவான் கோ. வே. பெருமாள், எம்.ஏ, பி.டி.,
ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி-10]

"காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருநைநதி—என
மேவிய ஆறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு." —பாரதியார்

உலக உருண்டையை உற்று நோக்குங்கள். அதில் இந்தியப் பெருநிலத்தின் தென்பகுதியைப் பாருங்கள். வடக்கே விரிந்து, தெற்கே வரவரச் சுருங்கி முடியும் முக்கோண நிலப் பரப்பினைக் காண்பீர்கள். இதனையே, நில நூலோர், 'தென்னிந்தியத் தீபகற்பம்' என்பர்; தொன்மை சான்ற தென்னாடு என்பர்; வடநூல் வாழ்நர், 'திராவிடம்' அல்லது 'திராவிட நாடு' என்பர்; பொதுவாக எல்லோரும் தமிழிலே 'தமிழகம்', 'தமிழ் நாடு', 'தமிழ் மாநிலம்' என்பர்.[1] இம்மாநிலத்தின் தென் பகுதியே, திருநெல்வேலி மாவட்டம் ஆகும். இவ் வட்டாரம் திக்கெல்லாம் புகழ் பெற்றது; சீமை என்னும் சிறப்புப் பெற்றது; தமிழ் வளர்த்த பொதிகை மலையையும் தமிழ்கண்ட தண் பொருநை ஆற்றையும் தன்னகத்தே கொண்டது; தமிழ் நூல்கள் தெளிவுபடுத்தியுள்ள ஐந்திணை அளாவியது; பழம் பெருமையின் பிழிசாறுகப் புகழப் பெறுவது. இங்கே, பொதியமும் பொருநையும் பொலிவுற்று விளங்குவதைக் காணலாம்!

## தமிழ்நாடு :

விளங்குகின்ற வரலாற்றுக் காலத்திற்கு இப்பால், தமிழ் நாட்டின் எல்லைகள் காலத்திற்குக் காலம் வேறுபட்டே வந்துள்ளன! ஆயினும், தமிழர்களின் தங்க இலக்கியங்கள் ஆகிய சங்க நூல்களிலே, 'வடக்கே வேங்கடம், தெற்கே குமரி, கிழக்கும் மேற்கும் கடல்கள்' என்றே தமிழக எல்லைகள் குறிப்பிடப் பெற்றுள்ளன! இந் நான்கு எல்லையுள், 'சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு' என்னும் முத்தமிழ் நாடுகள்

1. 'இந் நிலப்பகுதி, நீண்ட நெடுங்காலம் தன் பெயரிழந்து தவித்தது! நல்லவேளை; இந்தியப் பெருநிலம் அரசுரிமை பெற்றது! விடுதலை அடைந்த 15-7-1947-க்கு இப்பால், 2-10-1956-இல் மொழிவழி மாநிலங்கள் உதித்தன. 'சென்னை மாநிலம்' தமிழுணர்ந்த தலைவர்கள் ஆட்சியிலே ஒலித்த வாழ்த் தொலியோடு, 19-7-1967-இல் "தமிழ் நாடு' என்னும் தன்மானப் பெயர் மீண்டும் பெற்றது!—செய்தி.
—செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு—41; பரல். 12. ஆவணி 1937.

இலங்கின. கி. பி. 11ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தின் ஒரு பகுதியாக இருந்த 'சேர நாடு'. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே 'மலையாளம்' என்னும் 'கேரளம்' ஆயிற்று! தமிழ் நாட்டின் ஊடு சுவராக மேற்குத் தொடர்ச்சி மலை கருதப் பெறுவதாயிற்று! இம் மலைத் தொடர்ச்சியின் மேற்கே, மிகுதியும் வடமொழி கலந்த பழந்தமிழ், புதிய 'மலையாள மொழி' ஆயிற்று![2] கிழக்கே எஞ்சிய தமிழகத்தில் நின்று நிலைத்த தமிழ்—'என்றுமுள தென் தமிழ்' ஆயிற்று! இத் தமிழ்நாட்டு ஆறுகள் அனைத்தும், மேற்கே தோன்றிக் கிழக்கே ஓடிக் கடலில் கலக்கின்றன. அந் நெறியிலே, திருநெல்வேலி மாவட்டத்தில் பொருநைத் திருநதி பொதிய மாமலையின் உச்சியில் பிறந்து, ஏறத்தாழ எழுபத்தைந்து கல் பரந்து ஓடி மன்னார் குடாக் கடலிலே மண்டுகின்றது!

தொன்மைச் சிறப்பு:

இந்தப் பொதிகை மாமலையும், பொருநைப் பேராறும் விளங்க இயலாத வரலாற்றுக் காலத்திற்கு மிக முன்னரே வயங்குகின்றன. காலம் வரலாம்—போகலாம்; ஆனால், ஞாலம் உள்ளளவும் சால விளங்கும் தொன்மைச் சான்றாகத் தென்னாடு துலங்குகின்றது! குமரிக்குத் தெற்கேயுள்ள இந்து மாக்கடல், ஒரு காலத்தில் நிலப்பரப்பாக நிலவியது என்றும், அங்கே பஃறுளி ஆறும் பன்மலை அடுக்கமும் இருந்தன என்றும், அவை கடல் கொள்ளப் பெற்றன என்றும், இன்றைய தென்னகம் அதன் எஞ்சிய பகுதியே என்றும், இதுவே உலக மனித இனத்தின் தொட்டில் என்றும் மேலை நாட்டு அறிஞர் ஆராய்ந்து உறுதி செய்துள்ளனர். வடநாட்டு இமயமலையும் சிந்து கங்கை யாற்றுச் சமவெளிகளும் ஒரு காலத்தில் கடலாக இருந்தன என்றும், அந்த இமயம் எழுவதற்கும் சிந்து கங்கை தோன்றுவதற்கும் பன்னூறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, இத் தென்னாடு ஒரு முழு மாநிலமாக இருந்தது என்றும், அந் நிலப் பகுதியில் உள்ள கருங் கற்களும் கற்பாறைகளும் இதன் பழைமையைப் பறைசாற்றுகின்றன என்றும் மேற்புலத்தவர் ஆராய்ந்துள்ளனர். ஆதலின், மண்ணூல் ஆய்வினர், இத் தென்னாடே, இந்தியாவின் மிகப் பழைமை வாய்ந்த நிலப் பகுதி என்று முடிவு கட்டியுள்ளனர்![3] இவற்றை நம்பாதவர்களும்

---

2. A Short History of Kerala (1966) K. V. Krishna Ayyar —Introduction.

3. History of Tamil Literature (1929) M. S. Purnalingam Pillai; P: 7-9.

உண்டு! காலம் இன்னதென்று வரையறுத்துச் சொல்ல முடியாத கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன் தோன்றி மூத்த—மிகப் பழைமை வாய்ந்த நிலப்பகுதியின் சான்றாகவே நெல்லை மாவட்டம திகழ்கின்றது. இத்தொன்மை நிலத்தின் தனிச் சான்றுகளாகவே பொதியமும் பொருநையும் துலங்குகின்றன. மனிதர்கள் பிறக்கலாம்—இறக்கலாம்; வரலாற்று ஊழிகள் தோன்றலாம் மறையலாம்! ஆனால், இத் தொன்மை நிலம், என்றென்றும் நின்று நிலவும் சிறப்புப் பெற்றுள்ளது என்பதைத் தெரியலாம்!

பொதியம் :

'இலக்கியமும் வரலாறும் பிரிக்க முடியாத இரட்டைப் பிறவிகள்' என்பர். இவ்விரு துறைகளும் ஏற்றிப் போற்றும் எழில் மலையே 'பொதியம்' ஆகும்! தமிழக வரலாற்றிற்கு உட்பட்ட (i) சங்க காலம் கி. மு. 3000—கி. பி. 200, (ii) களப்பிரர் காலம் கி. பி. 200 - 400 (iii) பல்லவர் காலம் கி. பி. 400—900, (iv) சோழர் காலம் கி. பி 900 - 1200, (v) பாண்டியர் காலம் கி. பி. 1200—1350. (vi) நாயக்கர் காலம் கி. பி. 1350—1750, (vii) ஐரோப்பியர்—ஆங்கிலர் காலம் கி. பி 1750 1947, (viii) தற்காலம் கி. பி. 1947—க்குப் பின்னர் ஆகிய எல்லாக் காலங்களிலும் இப் பொதியமும் பொருநையும் பெருமைக்கு உரியனவாகவே போற்றப்பெற்று வருகின்றன! வடக்கே ஆரியன்காவுக் கணவாய் தெற்கே, ஆரல் ஆம் பொழிக்[4] கணவாய் ஆகிய இவற்றிற்கு இடையே ஏறத்தாழ இருபது பகுதிகளைக் கொண்டுள்ள 'பன்மலையடுக்கம்' வாய்ந்த பகுதியினைப் பார்க்கலாம். இம் மலைப்பகுதி, தென் கேரளத்திற்கும் திருநெல்வேலிச் சீமைக்கும் இடையே எடுப்பாக—நடு வரம்பாக விளங்குகின்றது! இஃது இந்த இரு மாநிலங்களுக்கும் உரிமையுடையது. ஆயினும், பெரும் பகுதி திருநெல்வேலி மாவட்டத்திலேயே பிறங்குகின்றது! இங்கேயுள்ள சிகரங்கள் ஏறத்தாழ 5000 அடி முதல் 6000 அடி வரை உயர்ந்துள்ளன. இவ் வட்டாரத்தில், மிக உயர்ந்த சிகரங்கள் சில உண்டு. இவற்றுள் ஐந்து முடிகளைக் கொண்ட ஓரிடத்தினை, 'ஐந்தலைப் பொதிகை' என்பர்; அதன் வடபால் அமைந்துள்ள மிகச் சிறந்த பகுதியையே 'பொதியம்' என்று போற்றுவர். அதனை 'ஏக பொதிகை' என்றும், 'அகத்தியர் மலை' என்றும்

4. இவ்விடம், 'ஆரல் வாய் மொழி' என்றும், 'அரைவாய் வழி' என்றும், 'ஆரம் பொழி' என்றும் வழங்கப் பெறுகின்றது! ஆரல்= மதில்; பொழி=எல்லை; ∴ எல்லையாகிய மதில் - நெல்லை மாவட்டக் கோவில் வரலாறு (1932)

'பெரிய பொதிகை' என்றும் இயம்புவர். கண்ணுக்கும் கருத்துக்கும் இனிய இம் மலை, கவிஞர் எண்ணத்திலே பொருந்தி வாழும் இயல்பினதாகும்! இதனைத் தென்பாண்டி நாட்டின் பொன்முடி என்பர்; ஈடு இணையற்ற இன்பம் தரும் எழில்மலை என்பர்; பீடுமிக்க செம்மாந்த வீரத் தோற்றத்தினை உடைய போர்க் காவலன் போன்றது என்பர்.[5] இது, வேனிற் காலத்தில், மேற்கே திருவனந்தபுரத்திலிருப்பவர்களுக்கும் தெரியும்; கிழக்கே திருநெல்வேலியில் நிற்பவர்களுக்கும் தெரியும்! அவ்வளவு உயரம் வாய்ந்தது! கடல்மட்டத்திலிருந்து 6132 அடி உயர்ந்துள்ளது என்று இதனை அரசியலார் கணக்கிட்டுள்ளனர். மண்டிக் கிடக்கும் எண்ணற்ற தேக்கு, அகில், சந்தனம், தேன், தேயிலை முதலிய மாண்புமிக்க மலைபடு பொருள்களை மறைத்துப் பொதிந்து வைத்துப் போற்றுவது போன்ற ஒரு பேற்றி இப் பெருமலைக்கு உண்டு! ஆதலின், இம் மாமலைக்குப் 'பொதியம்' என்றும், 'பொதியில்' என்றும், 'பொதிகை' என்றும், 'பொதியின் மலை' என்றும், 'பொதிய மாமலை' என்றும் தமிழ் முன்னோர் பெயர் சூட்டுவாராயினர்.[6] மேலும் மனத்திலே மலைப்பினை ஊட்டுகின்ற மாணப் பெரிய தோற்றம், நிலை, அளவு, வளங்கண்ட மனிதன், இதனை, 'மலை' என்றான்; 'மாமலை' என்றான்; 'மலையம்' அல்லது 'மலயம்' என்றான்; 'தென்மலை' என்றான்; 'செம்மலை' என்றான்! 'வடக்கே இமயம்—தெற்கே பொதியம் வரை வளம் தருவன' என்றான்! 'நிலைத்து வாழ்க' என்று வாழ்த்துவதற்குப், "பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்று நிலைத்து வாழியர்" என்றான்.[7] இங்கே, இரு பருவக் காற்றுக்களால் ஆண்டின் பெரும்பான்மையான மாதங்களில் மேகம் தவழ்ந்து, மழை பொழியும்! மரஞ்செடி கொடிகள் மல்கி வளரும்; மருந்து மூலிகைகளின் நலங்கவர்ந்து மென்காற்று வீசும்; இனிய மணங் கமழ்ந்து தென்றல் ஒளிரும்; அது புலவர் நாவில் பொருந்தும். தமிழ்மொழி திருந்தும்; தமிழ் முனிவர் திருப்பெயர் திகழும்; 'சந்தனப் பொதிகை செந்தமிழ்' மலையாகத் திகழும். இம் மலையின் மாண்பினை,

---

5. 'Pothiyil, one of the peaks of Western Ghats stands like a lofty sentinel in the southern portion of the range'—Page 49, LAND SCAPE AND POETRY (1966) Savier S. Thaninayagam.

6. 'Pothigai' more commonly called 'Pothiyam' or 'Pothiya-ma-malai' the meaning of which is probably 'a place of concealment.' Political and General History of the District of Tinnevelly (1881) by Rev. R. Caldwell, D. D., Litt. D., page-6.

7. *புறநானூறு—2: 20—24.*

குமரகுருபரர் படைத்துள்ள 'குறவஞ்சி' வெளியிடும் அழகினைக் கேளுங்கள்

"திங்கள்முடி சூடுமலை, தென்றல்விளை யாடுமலை,
தங்குமுகில் சூழுமலை. தமிழ்முனிவன் வாழுமலை,
அங்கயற்கண் அம்மைதிரு அருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை என்மலையே" [8]

பேராறு:

இப் பெருமை மிகுந்த பொதிகையிலே, ஆண்டின் பெரும் பகுதி மழை பொழிந்து நீர் வழியும்; ஆண்டுக்கு 300 அங்குல மழை இங்குப் பெய்து வருவதாகக் கணக்கிட்டுள்ளனர்! எனவே இதனை. 'மழை தவழ் பொதியில்' என்று மகிழ்ந்துரைத்தனர், பழந்தமிழ்ப் புலவர்![9] 'ஆடுமழை தவழும் கோடுயர் பொதியில்' என்று நற்றிணை போற்றுகின்றது![10] இப் பொதிகை மலையிலே கார் காலத்தில் கனமழை பொழியும்; அப் பொழுது, மலை முழுவதும் நீர் பெருகி வழியும்; பள்ளம் நோக்கி வெள்ளம் பாய்ந்து வரும்; பொங்கி வரும் நீர்ப் பெருக்கு நிலத்தினை ஊடறுத்து ஓடி வரும்; நீரலைகள் ஒன்றோடொன்று மோதும்; கற்களையும், பாறைகளையும் சாடும்; கரைகளில் வந்து தாக்கும்; அந் நீரோட்டம் நீண்ட போராட்டம் போன்று தோன்றும்; போரிடுவது – பொருவது போன்றே பொலிவுறும்; 'பொரு' என்னும் தமிழ்ச் சொல் 'போரிடு' என்னும் பொருளையே தரும்! இவ்வாறு பொதிய மலையெங்கணும் மழை பொழிந்து, அள்ளி வருகின்ற நீர்ப் பெருக்கின் துள்ளலை, இன்றும் காணலாம். வான் மழை வழாது பொழிந்து, நீர் மல்கி கருங்கற்களையும் கற்பாறைகளையும் கரைகளையும் பொருது போரிட்டு, நிலத்தை ஊடறுத்து ஓடைகளாகி – வாய்க்காலாகி – கால்வாய்களாகி – ஒன்று சேர்ந்து – சிற்றாறாகி – பேராறாகும் பேரழகு புலவர் நெஞ்சினைப் பிணிப்பதாகும்! எனவே, 'பொருநை' காரணப் பெயரே யாம்!

"வானம் தண் துளி தலைஇ ஆனாது
கல்பொரு(து) இரங்கும் மல்லல் பேராறு" [11]

இரு பொருநை யாறுகள்:

பொதிய மலையிலே, இவ்வாறு 'கல்பொருது இரங்கும் மல்லல் பேராறு'கள் இரண்டு புறப்படுகின்றன; 'பொருநை'

8. மதுரை மீனாட்சியம்மை குறம்—13; குமர குருபர அடிகள்.
9. குறுந்தொகை—84 : 3-6; புறநானூறு—128; 5-8.
10. நற்றிணை—379 : 11.
11. புறநானூறு—192 : 7, 8. கணியன் பூங்குன்றன்.

என்னும் காரணப்பெயர் பெற்று இலங்குகின்றன. அவற்றுள், ஒன்று 'பொதிகை'யின் மேற்கே சிறிய ஆருக வழிகின்றது; மற்றொன்று கிழக்கே பேராருகப் பாய்கின்றது. முன்னது, தென் கேரளத்தில் ஓடி அரபிக் கடலிலே கலக்கின்றது; பின்னது, திருநெல்வேலி வழியே மன்னார் வளைகுடாக் கடலிலே மண்டுகின்றது. மேலையாறு 'ஆன் பொருநை' என்றும் கீழையாறு 'தண் பொருநை' என்றும் வழங்கப் பெற்றது! அந்தோ, இத் தமிழ்ப் பெயரினைத் தெளிவாக உச்சரிக்கத் தெரியாதவர், 'தம்பர்னை'—'தம்ப பன்னி'—'தாம்பிர பர்னி'—'தாமிர பருணி'-'தாமிர வருணி' என்று நாவசைத்தவாறெல்லாம் நவில்வாராயினர்! இறுதியிலே, 'பொருநை' பருணி ஆகி, 'தண் பொருநை' என்பது 'தாம்பிர பருணி' என்றும் 'தாமிர வருணி' என்றும் உறுதி செய்வார் ஆயினர். இந்த இரு பொருநை ஆறுகளுமே 'தாம்பிர பருணி' என்று வழங்கப் பெற்றுள்ளன![12] இந்த ஆற்று நீர், செம்பு நிறம்—தாமிர வருணம் (வண்ணம்) உற்றிருப்பதால், 'செம்புநிற ஆறு' (Copper—Coloured River) 'தாம்பிர வருணியாறு' என்றும், செவ்விய சந்தன மரங்களுக்கிடையே தோன்றி வரும் இந்த ஆறு, சிவப்பு நிற (தாமிர) இலை அல்லது மரங்(பர்னம்)களுக்கு இடையே ஊடுருவி வருவதால், 'சிவப்பு இலையாறு' (River of the red leaves) 'தாம்பிர பருணி' யாறு என்றும் பெயர்க் காரணம் கற்பித்துள்ளனர்.[13]

சேரர் – பொருநை

ஏறத்தாழ கி. மு. 2ஆம் நூற்றுண்டு முதல் கி. பி. 2ஆம் நூற்றுண்டு வரை கடைச்சங்க காலப்பாக்கள் பாடப் பெற்றுள்ளன என்பர்; அவை, ஏறத்தாழ 30,000 அடிகளை உடையன; அவை அந்நாளைய வரலாறு துலக்கும் வாய்ப்புடையன என்பர்! தண் பொருநையாற்றின் கழிமுகத்தில் புகழ் பெற்று விளங்கிய கொற்கை நகரே, தமிழ் மன்னர் மூவரின் பிறப்பிடம் என்பர். அங்கே பாண்டியர், சேரர், சோழர் ஆகிய மூன்று உடன்பிறந்தவர்களும் ஒன்றி, தமிழகம் முழுவதையும் முக்காணியர்களாகி மரபு வழியே ஆண்டு வந்தனர் என்றும்,

---

12. Tambra parni (Porunai)—River in Tinnevelly Dist...... ......Near its source rises another and smaller stream of the same name, sometimes called the Western Tambraparni, which flows westward into Travancore.—IMPERIAL GAZATTEER OF INDIA (188 ) vol. xiii p. 169- 0 by Sir William Wilson Hunter, K. C. S. I., CIE., B. A., L, L. D.

1 . Madras District Gazetteers—Tinnevelly (1917) H. R, Pate, ICS, Vol I p. 9.

பின்னரே பாண்டியர் மேற்குமலைத் தொடர்க்குக் கிழக்கேயுள்ள தென் தமிழ்நாட்டைத் தமக்கே உரியதாக்கிக் கொண்டும், சேரர் மேற்கு மலைத்தொடருக்கு மேற்கேயுள்ள தமிழ் நிலப் பரப்பையும், சோழர் மேற்கு மலைத்தொடருக்குக் கிழக்கேயுள்ள வட தமிழ் நிலப் பகுதியையும் பெற்று முத்தமிழ் மன்னர்களாக நீண்ட நெடுங்காலம் ஆட்சி புரிந்தனர் என்றும் கதைகள் சொல்லுவர்.[14] இதனால், முதன் முதலில் மூன்று தமிழ் மன்னர்களும் ஒற்றுமையாக ஒன்றி வாழ்ந்த நிலப்பகுதி, 'தென்பாண்டி நாடு' ஆகிய 'தண் பொருநை நாடே' என்று தெளிவாக உணரலாம்! சேர நாட்டுப் பொருநையாறு, பாண்டி நாட்டுப் பொருநையாற்றை விட மிகச் சிறியதே ஆகும். ஆயினும், சங்ககாலப் பாவலர்கள் அதன் பெருமையை வையகம் வியக்கப் புகழ்ந்து பாராட்டியுள்ளனர்! சேரர் தலைநகர் 'வஞ்சிமாநகர்'; அதன் புறமதிலைப் பொருது போகும் 'பொருநையாற்று'ப் பெருமணலைப் புலவர்கள் போற்றியுள்ளனர். 'சேரர் பொருநை'யின் சிறப்பினைப் பலவாறு பாராட்டிப் பாடியுள்ளனர்.

இச் சேரநாட்டுப் பொருநையை, 'ஆன் பொருநை, தண் பொருநை, பொருநை, தண் ஆன் பொருநை' என்று பலவாறு வழங்கியுள்ளனர். பேய் மகள் இளவெயினி என்பாள், பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் சேர வேந்தனை,

> "தண் பொருநைப் புனல்பாயும்
> விண் பொருபுகழ் விறல் வஞ்சிப்
> பாடல் சான்ற விறல் வேந்தன்"[15]

என்று பாராட்டியுள்ளாள். இவ்வாறே, குண்டுகண் பாலியாதன் என்னும் புலவர், சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன் என்னும் சேர மன்னனை வாழ்த்துங்கால், 'உன் புகழ், வஞ்சி நகரின் புறமதிலை அலைக்கும் பொருநையாற்று மணலினும் பல்லாண்டு வாழ்க; அம் மாநகரைச் சுற்றியுள்ள பல ஊர்களின் எல்லா வயல்களிலும் விளையும் நெல் மணிகளைவிடப் பன்னாள் வாழ்க' என்று 'சேரர் பொருநை'யைக் குறிப்பிட்டுள்ளார்.

> "செல்வக் கடுங்கோ வாழியாதன்!
> ...கோதே நி(ன் புகழ் வாழியர்)
> புல்லிலை வஞ்சிப் புறமதில் அலைக்கும்
> கல்லென் பொருநை மணலினும், ஆங்கண்

---

14 History of Tinneveli (1881) by Rev. R. Caldwell, page 12. (Legandary origin of the three Tamil dynasties.)

15. புறநானூறு—11 : 5-7; இளவெயினி பாடியது.

பல்லூர் சுற்றிய கழனி
எல்லாம் விளையும் நெல்லினும் பலவே.''[16]

ஆலத்தூர்கிழார் என்னும் அருமை மிக்க சங்க நூற் புலவர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், ஒருமுறை கருவூரை முற்றுகையிட்டிருந்தபொழுது, அவனை இடித்துக் கூறியுள்ளார். அப்பொழுது, 'தண் ஆன் பொருநை' ஆற்று வெண்மணல் சிதையுமாறு போர் செய்தது, சிறந்த செயல் இல்லை என்று குறிப்பிட்டுள்ளார்:

''தண்ணான் பொருநை வெண்மணல் சிதைய
... ... ... ... ... ...
மலைத்தனை என்பது நாணுத்தக உடைத்தே.''[17]

இளங்கோவடிகள், மாடல மறையோன் கங்கைக் கரையிலே செங்குட்டுவனைக் கண்டு வாழ்த்தியதாக வருமிடத்திலே, இச் சேரர்க்கு உரிய பொருநையாற்றினைக் குறிப்பிட்டுள்ளார்:

''மன்னாள் வேந்தே! நின்வாழ் நாட்கள்
தண்ணான் பொருநை மணலினும் சிறக்க.''[18]

இவ்வாறு, சங்க இலக்கியங்களிலே பல இடங்களிலே, சேரர் நாட்டில் பாய்ந்த ஆறு, 'தண் ஆன் பொருநை' என்றும், அது சேரர் கோநகர் 'வஞ்சி' மூதூரை வளைத்துச் சென்றது என்றும் குறிப்பிடப்பெறறுள்ளது. இந்த 'வஞ்சிமாநகர்' பற்றி, கொஞ்ச நாட்களுக்கு முன்னர், அறிஞர் சிலர் வழக்கிட்டு ஆய்ந்து வந்தனர்! 'சேரன் செங்குட்டுவன்' எழுதிய திரு மு. இராகவ ஐயங்கார் அவர்களும், 'வஞ்சிமாநகர்' வரைந்த திரு இரா. இராகவ ஐயங்கார் அவர்களும், சேரர் தலைநகராகத் திகழ்ந்த பழைய 'வஞ்சி' திருச்சி மாவட்டத்தில் அமராவதி ஆற்றங்கரையிலுள்ள கருவூரே என்று சாதித்தனர்! அதனை, டாக்டர் S. கிருட்டிணசாமி ஐயங்கார், M. A, Ph. D., L. L. D. அவர்கள் மிகவும் துணிவோடும் தெளிவோடும் மறுத்து, 'சேரன் வஞ்சி'யை உறுதி செய்தார். இப்பொழுது 'பெரியாறு' என்பதே, அப்பொழுது 'பொருநையாறு' என்று பெயர் பெற்றிருக்க வேண்டும் என்று முடிவு செய்துள்ளார்![19] ஆனால் சிலர், இவை பொருந்திய ஆய்வு என்று தோன்றவில்லை என்பர்! சேரநாட்டில் ஓடும் 'தாமிர வருணி' கல்குளம் வட்டத்தில் தோன்றி, விளவங்கோடு வழியாகச் சென்று, அரபிக்

---

16. புறநானூறு—387; 30—36 குண்டுகட் பாலியாதன்.
17. புறநானூறு—36 : 5-13. ஆலத்தூர்கிழார் பாடியது.
18. சிலப்பதிகாரம்—28 : 125, 6. இளங்கோவடிகள்.
19. 'சேரன்—வஞ்சி (1946)—டாக்டர் S. கிருஷ்ணசாமி ஐயங்கார்; பக்கம் : 41, 42.

கடலிலே கலக்கிறது. இஃது, இப்பொழுதும், 'தாமிர வருணி' என்றே வழங்கப் பெறுகிறது. இதுவே முன்னாளில் 'சேரர்க்கு உரிய பொருநை'யாக விளங்கியிருக்கலாம் எனத் தோன்றுகின்றது.[20]

பாண்டியர்—தண் பொருநை :

இதனைத் 'தமிழ் கண்ட தண் பொருநை' யாறு என்றார், நாட்டுக் கவிஞர் சி. சு. பாரதியார்! திருநெல்வேலி மாவட்டத்தின் தெள்ளிய செல்வமாகத் தெளிந்தோடும் ஆறே, 'தண் பொருநை' (தாம்பிர வருணி) ஆறு என்று தனிப் பெருமையாகக் குறிப்பிடப் பெறுகின்றது; சங்க இலக்கியங்களுக்குப் பின்னர்த் தோன்றிய நூல்களில் எல்லாம் சாலச் சிறப்போடு போற்றப்பெற்றுள்ளது. வண்ணச் சரபம் தண்டபாணி அடிகளார், பொதிகையின் மேற்கில் ஓடும் ஆற்றை 'ஆண் ஆறு' என்றும், கிழக்கில் ஓடும் ஆற்றைப் 'பெண் ஆறு' என்றும் வேறுபாடு காட்டியுள்ளார்:

> "இளருமேற்கொன் கிழக்கினிற் பெண்ணெனக் கொழுநும்
> வளமை தோய்ந்தது மாழைமால் வரையுறழ் பொதியை."[21]

இவ்வாறே வடமொழிப் புலவர்கள், மேற்கு நோக்கி ஓடும் ஆறுகளை நதங்கள் (ஆண்பாற் பெயர்) என்றும், கிழக்கு நோக்கி ஓடும் ஆறுகளை நதிகள் (பெண்பாற் பெயர்) என்றும் குறிப்பிடுவர். இம் முறையிலே சேர நாட்டில் மேற்கு முகமாக ஓடும் ஆற்றை 'ஆண் பொருநை' என்றும், தென்பாண்டி நாட்டில் கிழக்கு முகமாக ஓடும் ஆற்றைப் 'பெண் பொருநை' என்றும் வழங்கியிருக்கலாம்! அவை நாளடைவில், 'ஆண் பொருநை', 'ஆன் பொருநை' என்றும், 'பெண் பொருநை', 'தண் பொருநை' என்றும் மருவி வழங்கி யிருக்கலாம்! இஃது இன்னும் ஆராய்வதற்கு உரியதே.

தமிழ்கண்ட தண்பொருநை :

"திருநெல்வேலி அகத்திய முனிவர் அருந்தவமிருந்து, தமிழ் வளர்த்த பொதிகை மலையும், தண்டமிழ் கண்டநேர் பொருநையாறும், தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடும் ஐவகை நிலமும் உடையது. இவை போன்று இன்னும் பல பெருமைகள் இம் மாவட்டத்துக்கு இருக்கின்றன" என்கிறார் சோம-லெ அவர்கள்.[22] 'தென்னிந்தியாவின், மிகப் பழைமையான

20. பொருநை நாடு (1963)—புலவர் கணபதிராமன், M.O.L. பக்கம் : 32.

21. புலவர் புராணம் (1903) பொதியாசலம் : 6.

22. நமது தமிழ் நாடு (7) : திருநெல்வேலி மாவட்டம் (1965); சோம - லெ; பக்-9.

நாகரிகம் நனி சிறந்து விளங்கியது, தண் பொருநைக் கரையிலேயே' என்பார், டாக்டர் R. கால்டுவெல் ஐயர் அவர்கள். அண்மையில் தமிழ்நாடு வந்திருந்த பன்மொழிப் புலமை பெற்ற சோவியத்து உருசியப் பெண்மணி திருமதி சுவெத்லானு என்னும் ஆரணங்கு, ''திருநெல்வேலித் தமிழ், தூய்மையான தமிழ்'' என்று கண்டுணர்ந்து பாராட்டியுள்ளார்.[23] இதனுல், தண் பொருநைக் கரையிலே வளர்ந்த தனித் தமிழின் செழிப்பினைத் தரணி போற்றும் முறை கண்டு தெளிவு பெறுகின்ரும் அல்லவா?

**இலக்கியங் கண்ட தண்பொருநை :**

சங்க இலக்கியங்களுக்குப் பின்னர்த் தோன்றிய நூல் களிலே, இத் 'தண்பொருநை' (தாமிரவருணி)ப் பேராறு, மிகவும் சீராட்டப் பெற்றுள்ளது. ஆழ்வார்களிலேயே, 'நம்மாழ்வார்' என்று நாவாரப் போற்றப் பெறுபவர், இந்த ஆற்றங்கரையிலே சிறந்து விளங்கும் இன்றைய 'ஆழ்வார் திருநகரி'-அன்றைய 'திருக்குருகூர்' என்னும் அழகிய ஊரிலே தோன்றினுர்; அவர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டு என்பர். அவர் அருளிய திருவாய்மொழியிலே இந்த ஆறு 'பொருநல்' என்று வழங்கப் பெற்றுள்ளது.[24] 'திருத்தொண்டர் மாக்கதை' வழங்கிய சேக்கிழார் பெருமான், இத் தண்பொருநை பாயும் திருநாட்டை, ''......தண் பொருந்தப் புனல் நாடு''[25] என்று குறிப்பிட்டுள்ளார். கம்பர் பெருமான், ''பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும் திருநதி''[26] என்று இந்த ஆற்றினை நெஞ்சாரப் போற்றி யுள்ளார். மூவருலாவிலே யுள்ள இராசராசன் உலா,

> ''..............................பட்டினஞ்சூழ்
> பொன்னிக்கும் கோதா விரிக்கும் பொருநைக்குங்
> கன்னிக்குங் கங்கைக்குங் காவலன்''[27]

என்று சோழ மன்னவன் தண்பொருநை பாயும் தென்பாண்டி நாட்டையும் ஆண்டான் என்ற குறிப்பினை வழங்கியுள்ளது! முக்கூடற்பள்ளு என்னும் சிற்றிலக்கியம் பொருநையாற்று வெள்ளத்தினை, ''பொருநையாறு பெருகிவாற புதுமை பாரும்

---

23. தினமணிக் கதிர்—முகப்பு; 22-6-1973.

24. திருவாய்மொழி—6 : 5 : 8.

25. திருநாவுக்கரசு நாயனர்:399. சேக்கிழார், 'தண்பொருந்தம்' என்று பாடியிருப்பதற்கு, உரையாசிரியர், 'தாமிர பரணி' எனத் தெளிவு படுத்தியுள்ளார்.

26. கம்பராமாயணம் : கிட்கிந்தாகாண்டம் : நாடவிட்ட படலம் : 31.

27. மூவருலா : இராசராச சோழன் உலா : 232.

பள்ளீரே''[28] என்று புலப்படுத்தி யுள்ளது. குமரகுருபர அடிகளார், தம் பாடல்களில் தாம் பிறந்த பொருநைப் பொன்னுட்டின் பெருமைகளைப் பல இடங்களிலே குறிப்பிட்டுப் பாடியுள்ளார்; மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழிலே, ''பொருநைத் துறைவன் பொற்பாவாய்! புதுநீராடி அருளுகவே''[29] என்றும், மதுரைக் கலம்பகம் என்னும் நூலிலே, முதல் செய்யுளிலேயே,

''விண்ணுறு தலைமடுப்ப நனையாநீ, துரைப்பொருநைத்
தண்ணுறு குடைந்துவைகைத் தண்துறையும் படிந்தனையே''[30]

என்றும் பாடியுள்ளார். வைகைக் கரையிலே வாழ்ந்த காலத்திலும், தாம் பிறந்த பொருநைக் கரையை நினைந்து பாடிய இவரது பற்றினை என்னென்பது? தன் வயிற்று வலி போக்கிய திருச்செந்தூர் இறைவனுக்குப் பிள்ளைக்கவி செய்த திருமாலியர் பகழிக்கூத்தர் இத் தண்பொருநை யாற்றின் தண்டமிழ்ப் பணிகளைக் கண்டுணர்ந்து பாடியுள்ளார். ஓர் எடுத்துக்காட்டு: ''பொதிகை மலையிலும் அதன் முடியில் தோன்றும் தென்றலிலும், சந்தனச் சோலைகளிலும், அங்கிருந்து பாய்ந்தோடி வரும் தண்பொருநைப் பேராற்றிலும், அது விளைவிக்கின்ற நெற்குலைகளிலும், கரும்புக் கழிகளிலும், எருமை வாயிலும், சிறுவர் மழலைகளிலும் செந்தமிழ் மணக்கும்!'' இதனுல், அவர், 'தண்பொருநைப் பேராற்றிலே தமிழ் நாகரிகம் மணக்கும்' என்ற வரலாற்று உண்மையினை வளமாகப் புனைந்துரைத்துள்ளார் அல்லவா?

''... ... ... இயல்
தண்பொருநை மாநதியும் அத்
தண்பொருநை பாயவிளை சாலிநெற் குலையும்
... ... பரந்த வழியும்
செந்தமிழ் மணக்கும் திருச்செந்தில் வேலனே!
சிறுதேர் உருட்டி யருளே.'' [31]

இவ்வாறு, சிற்றிலக்கியங்களும் பேரிலக்கியங்களும் தண்பொருநை யாற்றினையும், தண்பொருநை நாட்டினையும் தமிழ் நாகரிகத்தின் சான்ருகக் காட்டப்பெறும் அழகு, கற்று மகிழ்வதற்கு உரியதே ஆகும். பெருமை மிகுந்த தமிழ்ப் பண்பாடு கண்ட, இச் சிறிய தண்பொருநைச் சீராறு, நாம் பெற்ற பெரும் பேறே ஆகும் என்று உறுதியாக நம்பலாம்.

---

28. முக்கூடற் பள்ளு : 50 (சேவல்பன் சிந்து)
29. மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ் : 88 (நீராடற் பருவம்—6, குமரகுருபரர்.
30. மதுரைக் கலம்பகம்—1 : (2) 5 (குமரகுருபரர்)
31. திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்—96. (பகழிக் கூத்தர்)

# செய்திகளும் குறிப்புகளும்

## அறிவியல் நூல்கள் தமிழில் வரவேண்டும்

"தமிழ் மொழி மிகத் தொன்மையானது, சிறப்பானது என்ற போதிலும், அதன் சிறப்பினை நிலைநாட்ட இக்கால இளைஞர்கள் ஆங்கிலத்திலிருக்கும் அறிவியல் நூல்களைத் தமிழில் கொண்டுவரும் முயற்சியில் ஈடுபட்டுத் தமிழை வளர்க்க வேண்டும்' என்று 24-10-75 இல், சென்னை மருத்துவக் கல்லூரி முத்தமிழ் மன்றத்தார் நடத்திய விழாவில் பேசிய முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் குறிப்பிட்டார்கள். 5000 மருத்துவக் கலைச்சொல் விளக்க மொன்றினைத் தமிழில் கைப்படியாக இம் முத்தமிழ் மன்றத்தார் தொகுத்துள்ளனர். அதனை வெளியிட்ட டாக்டர் கலைஞர் மேற்கண்டவாறு கூறினர்.

விழாவிற்குச் சென்னை மருத்துவக் கல்லூரி முதல்வர் தலைமை தாங்கினர். டாக்டர். அண்ணாமலை வரவேற்புரை நிகழ்த்தினர். டாக்டர் லலிதா காமேசுவரன், டாக்டர் ஔவை நடராசன் மற்றும் அறிஞர் பலர் பேசினர்.

## மதுரை மாநகராட்சியின் அறிஞர் அண்ணா மாளிகை

தமிழக வரசினரால் கொடையாக வழங்கப்பட்ட 20 ஏக்கர் நிலப் பரப்பில் 55 நூறாயிரம் ரூபா செலவில் கட்டப்பெற்றுள்ள புதிய அழகிய கட்டிடம் 21-10-75 இல், கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்களால் திறந்து வைக்கப்பெற்றது.

இப் புதிய கட்டிடத்திற்கு 'அறிஞர் அண்ணா மாளிகை' எனப் பெயரிடப்பெற்றிருக்கிறது. இக் கட்டிடத்துள் நகராண்மைக் கழகக் கூட்டம் நடைபெறும் இடத்திற்குப் 'பெரியார் கூடம்' எனவும், மாநகராட்சிக் குழுக்கள் கூடுமிடத்திற்குக் 'கலைஞர் கருணாநிதி கூடம்' எனவும் அதிகாரிகள் கூடுமிடத்திற்குக் 'காமராசர் கூடம்' எனவும் பெயர்களிடப் பட்டுள்ளன. அடுத்து அண்ணா மாளிகையில் அமையவிருக்கும் நூலகத்திற்கு 'நாவலர் நூலகம்' எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

## திருச்சி தெ துரைராசப் பிள்ளை மறைவு

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்க அமைச்சரும் முன்னாள் சட்ட மன்ற மேலவை உறுப்பினருமான உயர்திரு தெ. துரைராசப் பிள்ளை அவர்கள் 14-10-75 இல் காலமானர் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். அன்னாரின் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## 1155 கல்லூரிகளில் புத்தக பாங்குகள்

"குடும்பாயத்தில் பொருளாதார வசதியற்ற மாணவர்கள் படிப்பதற்கு உதவி செய்யும் வகையில், இதுகாறும் நாட்டில் 1,155 கல்லூரிகளில் புத்தக பாங்குகள் நிறுவப்பட்டுள்ளன. இந்தக் கல்லூரிகள் ஒவ்வொன்றிற்கும் பல்கலைக் கழக மானியக் குழு 6,000 முதல் 20,000 ரூபாய் வரை இதற்கென ஒதுக்கியுள்ளது. இதுகாறும் இதற்காக 1·28 கோடி ரூபாய் செலவிட்டிருக்கிறது. கல்லூரிகள் அந்தந்த வட்டார மொழி நூல்களை வாங்கி வைப்பதற்கும் தக்க வசதிகளைப் பல்கலைக் கழக

மானியக் குழு செய்து தந்திருக்கிறது'' என்று 20-10-75 இல் அனைத் திந்திய வானொலியில் பேசிய இந்தியத் துணைக் கல்வி அமைச்சர் திரு. தி. பி. யாதேவ் அவர்கள் குறிப்பிட்டார்.

## கல்வி-மைய அரசின் ஆட்சிக்குட்படும்

கல்வியில் தேசிய உணர்வினை ஊட்டும் பொருட்டுப் பாடப்புத்தகங் களில் இடம் பெறும் பாடங்களைச் சனநாயகத்திற்கேற்பவும் மதச்சார் பற்றதாகவும் செய்ய அனைத்திந்திய அடிப்படையில் ஒரு திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

புது தில்லியில் 16-10-75 இல் கூடிய, அனைத்திந்தியப் பள்ளிகள் இயக்கத்தின் 25 ஆவது ஆண்டு மாநாட்டில், இத் திட்டம் கொண்டு வரப்பட்டது. இதன்படி இனி மாநிலங்களின் கல்வி முறை மைய அரசின் ஆட்சிக்கு உட்படுவதற்கேற்ப அரசியல் சட்டத்தைத் திருத்தி அமைக்கவேண்டும் என்று இவ் வியக்கத்தினர் அரசினைக் கோரி யுள்ளனர்.

## சோதிடம்—ஓர் அறிவியல்!

டாக்டர் கோசாமி கிரிதாரிலால் என்பவர் சமக்கிருதத்தில் எழுதிய சோதிடம் பற்றிய நூல் ஒன்றினை 20-10-75 இல் புது தில்லியில் நடை பெற்ற ஒரு விழாவில் குடியரசுத் தலைவர் திரு. பக்ருதின் அலி அகமது அவர்கள், வெளியிட்டு சோதிடம் ஓர் அறிவியல் என்றும் அதனை முயன்று ஆராய்ச்சி செய்தல் வேண்டும் என்றும், இந்த அறிவியல் கலை பற்றிய தவறான கருத்துகளைப் போக்கப் படித்தவர்கள் முன்வர வேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

மறைத்திரு மறைமலையடிகளாரும் இக் கருத்தினையே கொண்டிருந் தார். அமெரிக்க சோதிட வல்லுநர் ஒருவர் கூற்றுப்படி அடிகளார் 75 அகவை வரையே வாழ்ந்து மறைந்தார்.

## புகுமுக வழிப் புலவர் மாநிலத் தமிழ்க் கழகம்

டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களைச் சிறப்புத் தலைவராகவும், புலவர் சோம இளவரசு அவர்களைச் செயலராகவும் கொண்டு 9-10-75 அன்று சிதம்பரத்தில் 'புகுமுக வழிப் புலவர் மாநிலத் தமிழ்க் கழகம்' என்ற பெயரில் ஒரு தமிழ்க் கழகம் அமைக்கப் பெற்றது. பள்ளி இறுதி தேர்வுபெற்ற மாணவர்கட்கு ஒப்ப, புகுமுக வழிப் புலவர்கட்கும் முன் போலவே உரிமை வழங்கல், புலவர் என்ற படிப்பை திரிரியாமாறு செய்தல் மற்றும் தமிழ் நோக்கம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றுதல் ஆகியன இக் கழகத்தின் நோக்கங்களாகும்.

## தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் 50 ஆம் ஆண்டு நிறைவு விழா

பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி முதல் வரும், சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழு உறுப்பினருமான தவத் திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களின் பொன் விழா 11-10-75 இல் பேரூர் தமிழ்க் கல்லூரியில் திருமிகு நா. மகாலிங்கம், B Sc., F. E. அவர்கள் தலைமையில் இனிது நடைபெற்றது. அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர்.

## நாமக்கல் கவிஞர் 87 ஆவது பிறந்தநாள் விழா

நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களின் 87 ஆவது பிறந்தநாள் விழா 24-10-75 இல், சென்னை மாவட்ட மைய நூலகக் கட்டிடச் சொற்பொழிவுக் கூடத்தில் சட்டமன்ற மேலவைத் துணைத் தலைவர் சிலம்புச் செல்வர் உயர்திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அறிஞர் பலர் சொற்பொழிவாற்றினர்.

## கவிமணி நூற்றாண்டு விழா; மணிமண்டப அடிக்கல் நாட்டு விழா

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் நூற்றாண்டு விழாவினை யொட்டிப் புத்தேரியில் 29-10-75 இல் மணிமண்டப அடிக்கல் நாட்டு விழா நடைபெற்றது. செட்டிநாட்டரசர் இராசா சர் முத்தையா செட்டியார் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர்.

## அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை 11ஆவது கருத்தரங்கு

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறை ஆசிரியர் 11 ஆவது கருந்தரங்கு 25-10-75, 26-10-75 ஆம் நாட்களில் நடைபெற்றன. இவை திருக்குறள் கருத்தரங்கின் முதற் கூட்டங்களாகும். முதல்நாள் கூட்டத்திற்குத் திரு. ஆ. இராமசாமிப்பிள்ளை அவர்களும் 2 ஆம் நாள் கூட்டத்திற்குத் திரு க. வெள்ளைவாரணனார் அவர்களும் தலைமை தாங்கினர். திருக்குறள் பற்றி அறிஞர் பலர் சொற்பொழிவாற்றினர்.

## டாக்டர் மு. வ. முதலாண்டு நினைவுநாள் கூட்டம்

டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் முதலாண்டு நினைவுநாள் கூட்டம் கடந்த 2-11-75 ஞாயிறு மாலை மாவட்ட மைய நூலகத்தில், பச்சையப்பன் கல்லூரித் தமிழ் துறைத் தலைவர் டாக்டர் ரா. சீனிவாசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மாண்புமிகு அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன், கே. ஏ. மதியழகன், டாக்டர் வே. சண்முக சுந்தரம், அ. மு. ப. டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், சு. ந. சொக்கலிங்கம், டாக்டர் அவ்வை நடராசன், ச. சங்கரராசு, க. த. திருநாவுக்கரசு, இரா. சனார்த்தனம் ஆகியோர் உரையாற்றினர்.

## சென்னை அரசினர் பொது மருத்துவமனை நரம்பியல் பிரிவு வெள்ளி விழா

இந்தியாவில் மருத்துவத் துறையில் முதன் முதல் 1919இல் வேலூரிலும் அடுத்துச் சென்னையிலும் நரம்பியல் பிரிவு தொடங்கப் பெற்றது.

10-11-75 காலை 10 மணிக்கு இராசாசி மண்டபத்தில் நலத்துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் அன்பழகன் அவர்கள் தலைமையில் முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் தொடக்கவுரை ஆற்றியுள்ளனர்.

## தமிழ் 'கா. சு' நினைவு இலக்கிய 11 ஆவது ஆண்டு விழா

தாகூர் சட்டப் பேராசிரியர் தமிழ்க் கா. சு. அவர்கள் நினைவாகச் சிறப்புடன் நடைபெற்றுவரும் இலக்கிய விழாவின் பதினோராவது

ஆண்டு விழா நவம்பர்த் திங்கள் 8, 9ஆம் நாள்களில் குழித்தலை காவிரி நகர் அறிஞர் அண்ணு திருமண மண்டபத்தில் நடைபெற்றது. மாண்புமிகு அமைச்சர் என். இராசாங்கம் அவர்கள் விழாவினைத் தொடங்கி வைத்தார். மாண்புமிகு அமைச்சர் க. இராசாராம் அவர்கள் தலைமை தாங்கினர். இரண்டு நாட்களிலும் கலை நிகழ்ச்சி, பட்டி மன்றம், அறிஞர் சொற்பொழிவுகள் ஆகியன இனிது நடைபெற்றன. திரு இளமுருகு பொற்செல்வி அவர்கள் அறிமுகஉரை ஆற்றியபின், விழா இனிது நிறைவுற்றது.

## திரு. சுகவனம் சிவப்பிரகாசனுர் மறைவு

தமிழாசிரியரும், சைவ சமயப் பற்றுளருமான சுகவனம் சிவப்பிரகாசனுர் அவர்கள் 27-10-75 இல் காலமானுர்கள் என்ற செய்தி யறிந்து வருந்துகிறேம். இவர் சிறந்த நூலாசிரியராகவு மிருந்தார். இவர் எழுதியுள்ள 'குட்டித் திருக்குறள்' என்னும் நூல் பாராட்டற்குரியது. மறைந்த இவர்தம் குடும்பத்தார்க்கு நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

---

# மதிப்புரை

## ஜப்பானில் நான் கண்டதும் கேட்டதும்

பேராசிரியர் சு. ந. சொக்கலிங்கம் எம். ஏ. ஹிக்கின்பாதம்ஸ் லிமிடெட், சென்னை. விலை ரூ. 20-00.

பயணநூல் என்பது வரலாரே பூவியலோ அல்லது சமூக இயலோ அன்று. ஆனல் இவை அனைத்தும் கலந்த ஒன்று. காலத்தால் பழைய செய்திகளை அறிந்து கொள்ளும்போது வரலாற்று நூலாகவும் தட்பவெப்ப வேறுபாடுகளையும் இயற்கை அமைப்புகளையும் தெரிந்து கொள்ளும்போது பூவியல் நூலாகவும் அந் நாட்டு மக்களின் நடை, உடை முதலியவற்றைப் புரிந்து கொள்ளும்போது சமூக இயல் நூலாகவும் பயண நூல் திகழ்கின்றது. பேராசிரியர் சு. ந. சொக்கலிங்கம் அவர்கள் எழுதியுள்ள 'சப்பானில் நான் கண்டதும் கேட்டதும்' எனும் நூல் இவ் வகையில் சிறந்த பயண நூலாக உருவாகியுள்ளது. கண்ணைக் கவரும் வண்ணப் படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு.

பூமித்தாயின் மூக்கை அணி செய்யும் பிறை வடிவான மூக்குத்தி நி(ஜ)ப்பான்! அது அறிவாலும் உழைப்பாலும் உயர் ஒழுக்கத்தாலும் ஒரு நூற்றுண்டிற்குள் உலகோர் கண்டு வியக்கும் வண்ணம் முன்னேறியுள்ளதை மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் ஆசிரியர். ஈராயிரம் ஆண்டுப் பெருமையைப் பேசிக் கொண்டிருக்கும் நம்மவருக்கு இது நல்லதொரு பாடநூல்; வாழ்க்கை வழிகாட்டி.

ஊழையும் உழைப்பால் உப்பக்கம் காணும் நாடு நிப்பான். உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ என்ற மொழியைப் பொய்யா மொழியாக்கிய நாடு அது. சப்பானியர்கள் உழைப்பின் வெற்றியைக் கண்டு அதற்குரிய காரணங்களைக் கண்டு பிடித்துச் சுவையாக எழுதப் பெற்றது இந் நூல்.

'கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்' என்ற முதுமொழிக்கிணங்க நிப்பானுக்குச் சென்று வந்தவர்கள் யாரும் இந் நூலாசிரியரைப் போலத் தாம் கண்டதையும் கேட்டதையும் படித்ததையும் சுவைபட

விண்டிலர் என்று கூறத்தக்க அளவுக்கு விறுவிறுப்பாக எழுதப் பெற்றுள்ளது இந் நூல்.

இந் நூலைப் படிக்கும்போது நாமே ஒருமுறை உடலலுப்பும் பொருட்செலவு மின்றி நூலாசிரியருடன் நிப்பான் நாடு முழுவதும் சென்று கண்டு வருகிற உள்ள மகிழ்ச்சி ஏற்படுகின்றது.

எதையும் நுணுக்கமாகக் கண்டு, கண்டதைத் தெளிவாக விளக்கி எளிய இலக்கியச் சுவைமிக்க நடையில் நூலாசிரியர் இதனைப் படைத்துள்ளார்.

எழுமைக்கும் ஏமாப்பினைத் தரும் ஆசிரியரின் தமிழிலக்கியக் கல்வி அவர்தம் எண்ணங்களை வடிக்கும்போது மிக மிகக் கைகொடுத்துள்ளது. வள்ளுவன் குறள் முதல் பாவேந்தர் பாடல் வரை உள்ளவற்றையும் நற்றிணை, நாலடியார், நளவெண்பா முதலிய பாடல்களையும் இலக்கியத் தொடர்களையும் செய்திகளையும் ஆசிரியர் ஆங்காங்குப் பயன்படுத்தி இலக்கியச் சுவைமிக்க பயண நூலாக இதனை உருவாக்கியுள்ளார்.

உலகிலேயே மிக விரைவாகச் செல்லும் 'புல்லெட்' இரயிலில் பயணம் செய்தபோது அதன் வேகம் அவருக்கு 'மேலாடை வீழ்ந்த தெடு'வென்று இருதுபர்ணன் கூறுமளவில் 'நாலாறு காதம் நடந்த' நளனின் தேர் செல்லும் வேகத்தை நினைவூட்டியது அவருடைய ஆழ்ந்த இலக்கியப் புலமையைக் காட்டுகின்றது. இது போன்ற உவமை நயமும் கற்பனை வளமும் நிறைந்த இலக்கியநடை நூலின் பெருமையை உயர்த்துகின்றது.

நிப்பான்நாடு தொழில்வளத்தால் முன்னேறியுளதெனினும் அதற்கு அடிப்படைக் காரணம் அவர்களுடைய ஒழுக்கம் நிறைந்த பண்பாடே என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறார் ஆசிரியர்.

நம்நாட்டில் நரகவாழ்க்கையாகிக்கொண் டிருக்கும் கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறை அந் நாட்டில் இனிய வாழ்க்கையாகத் திகழ்வதைக் கண்டு ஆசிரியர் வியக்கிறார்; மகிழ்கிறார்.

எத் தொழிலைச் செய்தாலும் அமைதியாகப் பரபரப்பின்றிச் செயல் படும் அவர்கள் பழக்கமே அவர்கள் வெற்றிக்குக் காரணம் என்று கூறுகிறார்.

ஆசிரியர் பார்த்த சில நகரங்களிலுள்ள தொழிற்சாலைகள், கல்லூரிகள், பள்ளிகள், நூலகங்கள், நூல் வெளியீட்டகங்கள் முதலியவை அவருக் கேற்படுத்திய வியப்பை நூல் நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

அவற்றுடன் நிப்பானியர்களின் விளையாட்டுகள், மருத்துவ முறைகள், விழாக்கள், கலைகள், சமயங்கள், உடை, உணவு, பழக்க வழக்கங்கள் யாவும் நூலில் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளன.

இவ்வளவு விழுமிய ஒழுக்கத்தைப் பெற்ற அவர்களிடம் 'நெருப் பாற்றின் மீது மயிர்ப்பாலம்' அமைத்து, நடப்பது போன்ற காமக் களியாட்டத்திலுள்ள ஈடுபாட்டை ஆசிரியர் குறையாகச் சுட்டிக் காட்டுகின்றார். அதனால் அந் நாடு சீரழியுமோ என்று கவலையுறுகிறார்.

நிப்பான் நாட்டு முன்னேற்றத்திற்கு அவர்களுடைய நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் முக்கிய காரணமென்கிறார் ஆசிரியர். ஐம்பது ஆண்டுகளில் அவர்கள் தொழிற்றுறையில் வேகமாக முன்னேற்ற மடைவதற்குத் தாய்மொழி வாயிலாக அவர்கள் பெற்ற கல்வியே துணை

யாக இருந்துள்ளது என ஆசிரியர் எடுத்துரைக்கிறார். 'தொடக்கக் கல்வி முதல் கல்லூரிக்கல்வி வரை நிப்பான் மொழியிலேயே கற்கின்றனர்.' 'நிப்பானிய மொழியில்தான் அறிவியல் தொழில் நுட்பம் முதல் அனைத்து நூல்களையும் வெளியிடுகின்றனர்'. இஃது அவர் கூற்று.

மொத்தத்தில் இது பயண நூலாயினும் படித்துவிட்டு மறந்து விடக்கூடிய நூலன்று. ஒவ்வொருவரும் உழைத்துத் தாமும் முன்னேறித் தம்முடைய நாட்டையும் முன்னேற்ற வேண்டுமென்ற எண்ணத்தை அளிப்பதால் இஃது என்றும் படிக்கக் கூடிய சிறந்த வாழ்க்கைத் துணை நூல்.

இதனையே "'உழைப்பவரே வாழ்வில் உயர்வர்' என்று நூலைத் தொடங்கி 'இதில் சிறிதும் ஐயமில்லை' என்று அதனை முடித்துள்ள பாங்கு காட்டுகின்றது" என்று இந்நூலை வெளியிட்ட தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் குறிப்பிட்டது மிகப் பொருத்த மானதாகும். பயனும் சுவையுமிக்க இந்நூலை எழுதிய பேராசிரியரைப் பாராட்டுகிறோம்.

## வானொலியில் தவத்திரு குன்றக்குடி அடிகளார்

ஆசிரியர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார். வெளியீடு: கலை வாணி புத்தகாலயம், சென்னை-17. விலை: ரூ. 6-00]

சமய உணர்வு - தமிழுணர்வு - சமுதாய மறுமலர்ச்சி - நாட்டுப் பற்று ஆகியவற்றுக்காகவே துறவு மேற்கொண்டு தூய பணியாற்றிவரும் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் அவ்வப்போது வானொலியில் ஆற்றிய சொற்பொழிவுகளின் தொகுப்பே இந்நூல். இதன்கண் பத்தொன்பது கட்டுரைகள் உள்ளன. 'அன்புடைமை'யில் துவங்கி, 'குறையும் நிறையும்' என்னும் தலைப்பில் முடியும் இக் கட்டுரை நூல், கடந்த காலம் எப்படியிருந்தது? இனி வருங்காலம் எப்படியிருக்க வேண்டும்? என்பன பற்றி இளைஞர்களைச் சிந்திக்க வைக்கும் வகையில் சீரிய கருத்துகளை உள்ளடக்கியுள்ளது.

## பெரிய புராண ஆய்வுரை-மூன்றாந்தொகுதி-சம்பந்தர்

ஆசிரியர்: பேராசிரியர், வித்துவான், மறை திருநாவுக்கரசு அவர்கள் வெளியீடு: மறைமலையடிகள் பதிப்பகம், பி. 96 சவகர் நகர், அகரம், சென்னை-82 விலை: ரூ. 10-00

சுந்தரர் வரலாற்றினையும் அப்பர் வரலாற்றினையும் சிறந்த பெரிய புராண ஆய்வுத் தொகுப்புகளாகத் தமிழகத்திற்குத் தந்த திருமுறைச் செல்வர் மறை திருநாவுக்கரசு அவர்கள், மூன்றும் தொகுப்பாக ஈண்டுத் திருஞான சம்பந்தப் பெருமானின் திருவரலாற்றினைத் தம் நுண்மாண் நுழைபுலங்கொண்டு ஆராய்ச்சியாளர் ஏற்கும் வண்ணம் அகப்புறச் சான்றுகளுடனும், புள்ளி விவரங்களோடும் இனிய தமிழில் இயற்றி யுள்ளார். படித்துச் சுவைக்க வேண்டிய நூல்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

**அரசியல் தலைவர்கள் (முதற் புத்தகம்) என். கே. வேலன். பி. ஏ.**

பண்டித சவகர்லால் நேரு, டாக்டர் இராசேந்திர பிரசாத், டாக்டர் இராதாகிருட்டிணன், டாக்டர் சாகிர் உசேன், வல்லபபாய் படேல் ஆகிய அரசியல் தலைவர் ஐவரின் வரலாறுகள் இனிய எளிய தமிழில் எழுதப் பெற்றுள்ளன. நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய நூல். ரூ. 2 00

**அரசியல் தலைவர்கள் (2-ஆம் புத்தகம்) என். கே. வேலன் பி. ஏ.**

சி. இராசகோபாலாச்சாரியார், இராமசாமிப் பெரியார், அறிஞர் அண்ணா, பெருந்தலைவர் காமராசர் ஆகிய தமிழகத் தலைவர் நால்வரின் வரலாறுகள் இனிய எளிய தமிழில் எழுதப் பெற்றுள்ளன. நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய நூல். ரூ 2 50

**அறுமுகன் அடியவர் வரலாறு—தி. செ. முருகதாச அடிகள்**

முருகனை வழிபட்டு, அவனருள் பெற்று அருட்பாடல்கள் பாடியவர்களும் அரிய சமயத் தொண்டாற்றியவர்களுமான அருணகிரி நாத அடிகள், திருப்போரூர் சிதம்பர அடிகள், வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகள், பாம்பன் குமரகுரு தாச அடிகள், மறைத்திரு ஞானியார் அடிகள் ஆகியோரின் அரிய வரலாறுகளை இந்நூலாசிரியர் செவ்வனே எழுதியுள்ளார். முருக அன்பர்கள் இல்லங்கள் தோறும் இருக்க வேண்டிய நூல். ரூ. 2 50

**இளைஞர்க்கான கட்டுரைகள் (கழகப் புலவர் குழு)**

இதன்கண் பள்ளி மாணவர்க்கேற்ற 14 கட்டுரைகள் பல்வகைப் பொருள்பற்றி எழுதப்பட்டுள்ளன. இதனைப் பயில்வ தால் மாணவர்க்குக் கட்டுரைவன்மை மிகும். பள்ளி நூலகங்கள் தோறும் இருக்க வேண்டிய பயனுள்ள கட்டுரை நூல். ரூ. 2 25

**இளைஞர்க்கான நாடகங்கள் (கழகப் புலவர் குழு)**

பள்ளி மாணவர்கள் படித்து மகிழ்தற்கும், நடித்துப் பிறரை மகிழ்விப்பதற்கும் ஏற்ற எட்டுச் சிறு நாடகங்கள் இதன்கண் அடங்கி யுள்ளன. இவை இலக்கியம், நகைச்சுவை, கடவுட்பற்று ஆகிய சுவைகளைப் பயப்பன. ரூ 2 00

**கொங்குநாட்டுப் புலவர்கள்—புலவர் இரா. இளங்குமரன்**

இதன்கண் கொங்குநாட்டைச் சேர்ந்த கோவைகிழார் இராமச்சந்திரன் செட்டியார், சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், புலவர் முத்துசாமிக் கோனூர், புலவரேறு வரதநஞ்சைய பிள்ளை, பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை, கவிபரசு அ. கு. நடேச கவுண்டர், புலவர் குழந்தை, சிவநெறிச் செம்மல் கந்தசாமி முதலியார், கோவைப் புலவர் திருச்சிற்றம்பலம் பிள்ளை ஆகிய புலவர் பெருமக்களின் வரலாறுகள் அடங்கியுள்ளன. சிறுவர்கள் படித்து மகிழும் வண்ணம் நல்ல தமிழில் எழுதப்பட்டுள்ளன.

ரூ 2 25

பதிவு எண் : M. 4899

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| டாக்டர் மு. வ.—டாக்டர் இரா. தண்டாயுதம் | 3 00 |
| தமிழ் நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்—சோமலெ | 8 75 |
| முதலாம் இராசராச சோழன் —திரு. க. த. திருநாவுக்கரசு | 9 55 |
| ஜப்பானில் நான் கண்டதும் கேட்டதும் —திரு. சு. ந. சொக்கலிங்கம் | 20 00 |
| Dr. Mu. Va —Ed. Dr. S. V. Subramaniam & Manavalan | 20 00 |
| பெரிய புராணத்தில் உவமைகள்—அ. சங்கரி | 10 00 |
| தமிழ்ப்பத்திரிகைகள்—குளத்தூரான் | 7 50 |
| புனித நெறி—குன்றக்குடியடிகளார் | 3 50 |
| பால்மதி—டாக்டர் ஏ. என். பெருமாள் | 6 00 |
| மனித நிழல்கள்—ஆர்வி | 8 00 |
| Oxford Picture Dictionary-English-Tamil – K. Venkatasubramaniam | 7 50 |
| பண்பாட்டின் சிகரங்கள் —டாக்டர் சாலினி இளந்திரையன் | 3 00 |
| புதிய ராகங்கள்—வெ. நடராஜன் | 3 50 |
| ஒன்றிய உள்ளங்கள்—உமாசந்திரன் | 14 00 |
| புதுக்கவிதை முற்போக்கும் பிற்போக்கும் —நா. வானமாமலை | 6 00 |
| தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு —பி. எல். சாமி | 6 00 |
| சோவியத் நாட்டைச் சுற்றிப் பார்ப்போம்—மாஸ்கோ | 7 50 |
| சோவியத் நாட்டில் குழந்தைகள்—சு. ந. சொக்கலிங்கம் | 5 00 |
| புதிய உலகம் புதிய பறவைகள் | 5 00 |
| நிக்கோபர் தீவுகள் தமிழில்:—டாக்டர் சாலிஇளந்திரையன் | 7 00 |
| Anna Speaks —C. N. Annaduari | 48 00 |
| South India —Baker | 50 00 |
| The Wisdom of the Tamil People —Emmons E. White | 40 00 |
| A Grammar of Tirukkural —Dr. A. Dhamotharan | 35 00 |
| Subramania Bharati; Personality and Poetry Dr. S. Vijaya Bharati | 40 00 |

அப்பர் அச்சகம், சென்னை - 1.